# கணக்கதிகாரம்

கொறுக்கையூர்
காரிநாயனார்
அருளிச் செய்தது.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி.. ::``சென்னை-1.

## பதிப்புரை

"எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டும்,
கண்ணென்ப வாழு முயிர்க்கு"

என்பது நம் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் வாய்மொழி. "எண்ணுமெழுத்துங் கண்ணெனத்தகும்," "எண்ணெழுத் திகழேல்" என வழங்கும் மூதுரைகளும் எண்ணை முதலாகக் கொண்டனவே. "எழுத்துச்சுவடி" எனப் பெயரிடாது "எண்சுவடி" என எண்ணும் எழுத்தும் கலந்து எழுத்தாணியால் தீட்டிப் பள்ளிப் பிள்ளைகள் கற்பதற்கு முதலிற் கொடுக்கம் பனையோலைக்கட்டுக்குப் பெயரிட்டு வழங்கியதும் அதன் முதன்மையை யுணர்த்தும். எனவே உலகத்திலுள்ள கலைகள் பலவற்றினும் தலைமை பெற்றுச் சிறந்தன என்னும் எழுத்துமே என்பதும், அவ்விரண்டினும் முதன்மையுடையது 'எண்' என்பதும் எவரும் அறிவர். எண் அறியாமல் மற்றைக் கலைகள் கற்க இயலா என்பதும், மக்கள் வாழ்வு நன்முறையில் இயங்குவதற்குத் துணைபுரிவது அதுவே எனவும் கண்டு அறிஞர் அதனை முன்வைத்தனர் என ஆய்ந்துணர்க. ஒன்றுமுதற் பத்துவரையுள்ள எண்களைப் பயின்றபின்தான் எளிதிற் கூட்டவும் குறைக்கவும் பெருக்கவும் வகுக்கவும் உரிய கணக்குகள் செய்ய இயலும். எழுத்து முதலியவற்றை எண்ணுவதற்கும் பொருள்கள் எவற்றையும் கூட்டுவதற்கும் குறைப்பதற்கும் எண் பயிற்சி இன்றியமையாதது. கணக்குச் சிறிதும் அறியாதவன் எக்கலையும் கற்கத் தகுதியில்லாதவன் என்பது வெள்ளிடை மலைபோல் தெள்ளிதிற் புலனாம். பண்டைக் காலத்து ஆசிரியர்க்கு "கணக்காயர்" எனப்பெயரிட்டு வழங்கியிருப்பது கணக்கின் பெருமையைக் காட்டும் கண்ணாடியாகும். எனவே கணக்குக் கலையே எக்கலையினும் சிறந்த நற்கலை, முற்கலை என நாம் காண்கின்றோம்.

நமது நாட்டில் கணக்கினை யுணர்த்தும் பழங்கால நூல்களிற் 'கணக்கதிகாரம்' என்பது ஒன்று கண்டோம். இந்நூல் இயற்றிய ஆசிரியர் பெயர் காரிநாயனார் எனவும், சோழவள நாட்டில் உள்ள கொறுக்கையூர் இவர் வாழ்ந்த ஊர் எனவும், இவர் தந்தையின் பெயர் புத்தன் எனவும், மன்னர் குலத்தின் வழிவந்தவர் எனவும் "பொன்னி நன்னாட்டுப் பொருந்திய புகழோன்... புத்தன் புதல்வன் காரியென்பவனே" என்ற சிறப்புப் பாயிரத்தால் தெரிந்தோம். நிலம், பொன், நெல், அரிசி, கல், கால் என்ற ஆறுவழிக் கணக்குகளையும் அறுபது செய்யுளால்

உணர்த்தினர் என்பதை ''ஆதிநிலம் பொன்னெல் லரிசியகலிடத்து நீதிதருங் கால்கல்லே நேரிழையா - யோதியுறுவதுவாகச் சமைத்தே னொன்றெழியா வண்ணம் அறுபது காதைக்கே யடைத்து'' என்ற வெண்பா விளக்குகின்றது. ஆறுவழிக் கணக்கே யன்றி வேறுவழிக் கணக்குகள் பல இந்நூலிற் காணலாம். அவை காண்பார்க்குத் திகைப்பும், நகைப்பும், வியப்பும், நயப்பும் விளைப்பன. கணக்கில் வல்ல அறிஞரே அந்நூலின் பெருமையை எடுத்துவிளக்க வல்லவர். எம்போன்றார்க்கு எளிதன்று.

இனி ''ஆரிய மொழியால் முன்னர் அந்தணர் எடுத்துரைத்த சீரிய கணித நூலை... தமிழாற் சொல்வேன் சிறந்தவர் இகழாரம்மா'' என்று அவையடக்கம் அறைந்திருப்பது நம்மனோர்க்கு நகைப்புக் கிடனாம் எண்ணற்ற கலைகள் நம் தமிழ்நாட்டில் எத்துணையோ ஆண்டுகட்கு முன்னிருந்து வளர்ந்து பெருகி வந்திருப்பவும், கணக்கு நூல்கள் பலதோன்றியிருப்பவும், தமிழ் கொள்ளாமல் ஆரியமொழிக் கணித நூலைக் கொண்டு இயற்றினேன் என்ற கருத்து விளங்கவில்லை. வடவர் நம் நாட்டிற் புகுந்து ஆரிய மொழியே தெய்வ மொழி என்றும், ஆரியரே பூமியில் தேவர்(பூசுரர்) என்றும், அவர்கள் கூறிய நூல்களையே போற்ற வேண்டும் என்றும், அவர்களையே வணங்க வேண்டும் என்றும் நம்மனோர்க்குக் காட்டி, அக் கொள்கைகட்கு இயையப் பலநூல்களும் இயற்றிச் சூழ்ச்சி செய்த காலத்துத் தோன்றியவர் இவர் போலும். அதனால் அம்மொழிக் கணித நூலை ஆய்ந்து கணிதநூல் தமிழிற் கூறினேன் என்றார். ஒருமா, இருமா முதலிய சின்னங்களும் முந்திரி முதலிய பின்னங்களும் அவற்றிற்கு உரிய எண்வடிவங்களும் தமிழ்நாட்டார் பல்லாண்டுகட்கு முன்னரே பயின்றவர் என்பதற்கு வரலாறும் இலக்கியமும் சான்றாகும் அன்றோ? கல்வெட்டுக்களும் இதனைக் காட்டும். ஓவியக்கலை, சிற்பக்கலை, இசைக்கலை, நாடகக்கலை நுட்பத்தையும் நம்மனோர் கண்டதுபோல் மேல் நாட்டவருங்கூடக் கண்டிலர் என்பது கண்கூடு. அந்நாட்டவரே நம் கலைகளை வியந்து போற்றிப் பாராட்டுகின்றனர். இங்ஙனமிருப்ப இந்நூலாசிரியர் தமக்குப் புகழ் என நினைத்துப் பொய்யுரை புகன்றனர் என ஒருவாறு துணியலாம். முன்னும் வடவரையும் அவர் மொழியையும் அவர் பண்பினையும் செயலினையும் பாராட்டிப் பாடிய புலவரும் பலர் உளர். இன்னும் பாராட்ட எண்ணுவோரும் சிலர். இம் முறையில் ஆய்ந்தாற் 'கணக்கதிகாரம்' தமிழ்மொழி நூலே யன்றி வடவர் நூலன்று.

இந்நூலின் உரையாசிரியர் கணக்குகளை நன்கு ஆய்ந்து கரை கண்டவர் போலும். பெருக்கல் வகுத்தல்களைத் தமிழ் முறையிலேயே வரைந்து காட்டி விளக்குகின்றர். இவர் கணக்கதிகாரம், ஏரம்பம், கிளராலயம், அதிசாகரம், கலம்பகம், திரிபுவனதிலகம், கணிதரத்தினம், சிறு கணக்கு எனப் பல கணிதநூற் பெயர் காட்டுகின்றார். அந் நூல்களில் எவையேனும் இன்றுள்ளனவா என்று ஆய்ந்தால் இல்லை எனத் தெளிவாகக் காணலாம். இந்நூல் ஒன்றுமட்டும் எவ்வாறோ ஏட்டுப் படிவத்தினின்று அச்சுப்படியை யடைந்துள்ளது. இதனைப் போற்றிக் காக்கவேண்டியது நம் கடமையாம் இதன் அருமையும் பெருமையும் கணக்குப் பயின்ற நுண்ணறிவினர்க்கே நன்கு விளங்கும்.

இந்நூல் ஏட்டுப்படியிலிருந்து அச்சுப்படியேறி ஆண்டுகள் பல ஆயினவேனும், வெளியீடுகள் பல மேயினவேனும் இதன் உண்மை வடிவம் ஒருவர்க்கும் புலப்பட இயலாத நிலையின் நின்றது. சொல்வழுக்கள் ஆய்ந்து திருத்திப் பதிப்பாரின்றிச் செய்யுளுக்கு உரை முரணாகவும் மா முதல் முக்கால்வரையுள்ள சின்னங்களின் வடிவங்களும் ஒன்று முதலாகிய எண் வடிவங்களும் தெற்றென விளங்காமல் வேறுபாடாகவும் தோன்றின. இந்நூலைக் காண்பவர் திகைத்து "இது என்ன கணக்கு நூல்" என நகைத்து வசைகூறித் தூற்றி எறிந்துவிடு நிலையில் இருந்தும் பண்புடைய தமிழர் பலர் இதனைப் பண்டை நூல் என்ற காரணத்தாற் பொன் எனப் போற்றிப் புலவர் இல்லங்களிலும் நூல்நிலையங்களிலும் ஏற்றிக் காப்பாற்றி வந்தனர் எனத் தோன்றுகிறது. படித்துப் பயன்பட்டவர் பலர் இலர் என்பதை அச்சுப்படிவங்கள் அனைத்தையும் ஒருங்கு சேர்த்துக் காண்பவர் உணர்வார்.

எமது கழகம் பண்டைத்தமிழ் நூல்கள் பலவற்றையும் வழுக்களைந்து திருத்திக் கற்பார்க்குப் பயன்படும்படி அச்சியற்றி வெளிப்படுத்தும் நோக்கமே கொண்டது ஆதலின் இதனையும் அம்முறையில் ஆய்ந்து வெளியிடக் கருதிற்று. கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள் செய்யுட்களையும் உரை நடையையும் ஒருவாறு திருத்தி உதவி புரிந்தனர். கணக்கின் வடிவமும் எண் வடிவமும் கண்டறிந்து திருத்தி யுதவுவார் ஒருவரைப் பன்னாளாக நாடியும் கண்டிலோம். இப்போது நம் கழக ஆட்சியாளர் வ.சுப்பையா பிள்ளை அவர்கள் இதனைத் திருத்தமாக வெளியிடக்கருதி எண்களின் வடிவங்களும் கீழ்வாயிலக்கங்களின் வடிவங்களும், மரக்கால், படி முதலியவற்றைக் காட்டும் வடிவங்களும் தமிழ்முறைக்கு ஏற்பப்பழைய எண் சுவடிகளை வைத்து ஆய்ந்து முன்னுள்ள பதிப்புக்களின் வழுக்களைந்து திருத்தியும் புதுக்கியும், கணக்கு ஒவ்வொன்றையும் கணித்து அவற்றின் முடிவு கண்டு பிழைகளைத் திருத்தியும், எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்ற அளவைகள் வேறுபாடு அறிந்து திருத்தியும் யாவர்க்கும் எளிதில் விளங்கும்படி யமைத்துத் தந்து இதனை வெளியிடுகின்றனர்.

இதன்கண் பாட்டு முதற்குறிப்பகரவரிசையும், தமிழ் எண் சுவடியும், தமிழ் எண்களின் விளக்க அட்டவணையும் எழுதிச் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. முன்னுள்ள அச்சுப்படிவங்களின் நிலையும் இந்நாள் எம் கழக வாயிலாக வெளியேறும் புதுமையான புத்தகப் படிவத்தின் நிலையும் காய்தல் உவத்தல் இன்றி ஆய்வார் காண்பார் அருமையும் பெருமையும். எனவே இந்நூலைப் போற்றுங் கடமை நாட்டவர்க் குரித்து என்பது கூறாமலே விளங்கும்.

தண்டமிழ் நாட்டுப் பண்டையோர் கண்ட என்னும் கீழ்வாயிலக்கமும் வடிவமும், நிலம், பொன், அரிசி, நெல், கால், கல் என்ற ஆறுவகைக் கணக்கும் வேறுவகைக் கணக்கும் தெள்ளிதின் உணர்ந்து உள்ள மகிழ்வடைவதற்கும், வாழ்விற் பல கணக்குகள் கண்டு பயன்பெற்று வாழ்வதற்கும், வழிகாட்டும் கணக்கு நூல் இஃது ஒன்றுமட்டுமே யுள்ளது. "கணக்கதிகாரம்" என்ற இந்நூலை மக்கள் யாவரும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் பயனடையுமாறு வேண்டுகின்றோம். இதுபோன்ற அருமையான நூல் வெளியீட்டுப் பணி மேன்மேலும் தொடர்ந்து

புரிந்து கழகம் உயர்நிலை யெய்துமாறு ஊக்குவிப்பது தமிழ் நன்மக்கள் கடமையாம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## தமிழ் எண் முறை

தமிழ் எண் முறைக்கும், ஆங்கில எண்முறைக்கும் பலவகைகளில் வேறுபாடுகளிருக்கின்றன. தமிழ் எண்ணின் விவரம் இதனடியிற் குறிக்கப்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| க | 1 |
| உ | 2 |
| ங | 3 |
| ச | 4 |
| ரு | 5 |
| சா | 6 |
| எ | 7 |
| அ | 8 |
| கூ | 9 |
| ௰ | 10 |
| ௰க | 11 |
| ௰உ | 12 |
| ௰ங | 13 |
| ௰ச | 14 |
| ௰ரு | 15 |
| ௰சா | 16 |
| ௰எ | 17 |
| ௰அ | 18 |
| ௰கூ | 19 |
| உ௰ | 20 |
| உக | 21 |
| உஉ | 22 |
| உங | 23 |
| உச | 24 |
| உரு | 25 |
| உசா | 26 |
| உஎ | 27 |
| உஅ | 28 |
| உகூ | 29 |
| ங௰ | 30 |
| ஙக | 31 |
| ஙஉ | 32 |
| ஙங | 33 |
| ஙச | 34 |
| ஙரு | 35 |

| | |
|---|---|
| ௩௬ | 36 |
| ௩௭ | 37 |
| ௩௮ | 38 |
| ௩௯ | 39 |
| ௪௰ | 40 |
| ௪௧ | 41 |
| ௪௨ | 42 |
| ௪௩ | 43 |
| ௪௪ | 44 |
| ௪௫ | 45 |
| ௪௬ | 46 |
| ௪௭ | 47 |
| ௪௮ | 48 |
| ௪௯ | 49 |
| ௫௰ | 50 |
| ௫௧ | 51 |
| ௫௨ | 52 |
| ௫௩ | 53 |
| ௫௪ | 54 |
| ௫௫ | 55 |
| ௫௬ | 56 |
| ௫௭ | 57 |
| ௫௮ | 58 |
| ௫௯ | 59 |
| ௬௰ | 60 |
| ௬௧ | 61 |
| ௬௨ | 62 |
| ௬௩ | 63 |
| ௬௪ | 64 |
| ௬௫ | 65 |
| ௬௬ | 66 |
| ௬௭ | 67 |
| ௬௮ | 68 |
| ௬௯ | 69 |
| ௭௰ | 70 |
| ௭௧ | 71 |
| ௭௨ | 72 |
| ௭௩ | 73 |
| ௭௪ | 74 |
| ௭௫ | 75 |
| ௭௬ | 76 |
| ௭௭ | 77 |
| ௭௮ | 78 |

| | |
|---|---|
| ௭௯ | 79 |
| ௮௰ | 80 |
| ௮௧ | 81 |
| ௮௨ | 82 |
| ௮௩ | 83 |
| ௮௪ | 84 |
| ௮௫ | 85 |
| ௮௬ | 86 |
| ௮௭ | 87 |
| ௮௮ | 88 |
| ௮௯ | 89 |
| ௯௰ | 90 |
| ௯௧ | 91 |
| ௯௨ | 92 |
| ௯௩ | 93 |
| ௯௪ | 94 |
| ௯௫ | 95 |
| ௯௬ | 96 |
| ௯௭ | 97 |
| ௯௮ | 98 |
| ௯௯ | 99 |
| ௱ | 100 |
| ௱௧ | 101 |
| ௱௨ | 102 |
| ௱௩ | 103 |
| ௱௪ | 104 |
| ௱௫ | 105 |
| ௱௬ | 106 |
| ௱௭ | 107 |
| ௱௮ | 108 |
| ௱௯ | 109 |
| ௱௰ | 110 |
| ௱௨௰ | 120 |
| ௱௩௰ | 130 |
| ௱௪௰ | 140 |
| ௱௫௰ | 150 |
| ௱௬௰ | 160 |
| ௱௭௰ | 170 |
| ௱௮௰ | 180 |
| ௱௯௰ | 190 |
| ௨௱ | 200 |
| ௩௱ | 300 |
| ௪௱ | 400 |

| | |
|---|---|
| ௫௱ | 500 |
| ௬௱ | 600 |
| ௭௱ | 700 |
| ௮௱ | 800 |
| ௯௱ | 900 |
| ௲ | 1000 |
| ௲௱ | 1100 |
| ௲௨௱ | 1200 |
| ௲௩௱ | 1300 |
| ௲௪௱ | 1400 |
| ௲௫௱ | 1500 |
| ௲௬௱ | 1600 |
| ௲௭௱ | 1700 |
| ௲௮௱ | 1800 |
| ௲௯௱ | 1900 |
| ௨௲ | 2000 |
| ௩௲ | 3000 |
| ௪௲ | 4000 |
| ௫௲ | 5000 |
| ௬௲ | 6000 |
| ௭௲ | 7000 |
| ௮௲ | 8000 |
| ௯௲ | 9000 |
| ௰௲ | 10000 |
| ௨௰௲ | 20000 |
| ௩௰௲ | 30000 |
| ௪௰௲ | 40000 |
| ௫௰௲ | 50000 |
| ௬௰௲ | 60000 |
| ௭௰௲ | 70000 |
| ௮௰௲ | 80000 |
| ௯௰௲ | 90000 |
| ௱௲ | 100000 |
| ௨௱௲ | 200000 |
| ௩௱௲ | 300000 |
| ௪௱௲ | 400000 |
| ௫௱௲ | 500000 |
| ௬௱௲ | 600000 |
| ௭௱௲ | 700000 |
| ௮௱௲ | 800000 |
| ௯௱௲ | 900000 |
| ௰௱௲ | 1000000 |
| ௨௰௱௲ | 2000000 |
| ௩௰௱௲ | 3000000 |

| | |
|---|---|
| சயொது | 4000000 |
| ருயொது | 5000000 |
| சுயொது | 6000000 |
| எயொது | 7000000 |
| அயொது | 8000000 |
| கூயொது | 9000000 |
| ாாது | 10000000<br>(கோடி) |

குறிப்பு: ய- ஐ க0 என்றும், உய-ஐ உ0 என்றும், ா-ஐ க00 என்றும், ாக-ஐ க0க என்றும், ாஉய-ஐ கஉ0 என்றும், து-ஐ க000 என்றும், துஉா-ஐ கஉ00 என்றும் பிற்காலத்தில் எழுதுகின்றனர்.

பின்ன இலக்க வாய்பாடு

'பின்ன இலக்கம்' என்பது ஒரு முழு எண்ணைப் பாகித்து உபயோகிப்பதற்கு வழங்கும் பெயராகும். தமிழில் ஒரு முழு எண்ணை ஈாஉய பாகங்களாகப் பகுத்து அதில் ஒரு பாகத்திற்கு (ஷ) முந்திரி என்று பெயரிட்டுள்ளனர். முந்திரியும் அதற்கு மேற்பட்ட பின்ன இலக்கங்களின் மதிப்பும் கீழே தரப்பட்டிருக்கின்றன.

தமிழ்ப் பின்ன இலக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| ஷ | முந்திரி | 1/320 |
| ஶ | அரைக்காணி | 1/160 |
| - | காணி | 1/80 |
| சு | அரைமா | 1/40 |
| சூ | முக்காணி | 3/80 |
| ப | ஒருமா | 1/20 |
| ஃ | இரண்டுமா | 1/10 |
| ஸ | மூன்றுமா | 3/20 |
| ல | நான்கு மா | 1/5 |
| வ | கால் | 1/4 |
| உ | அரை (இ) | 1/2 |
| ஷ | முக்கால் (ஈது) | 3/4 |
| க | ஒன்று(முழு எண்) | 1 |

நாணயப்பகுதி பின்ன எண்வகை

| | | |
|---|---|---|
| ூ | கால் வீசம் (-ஷ) | 1/64 |
| சு | அரை வீசம்(சுஶ) | 3/64 |
| ப- | வீசம் (ய) | 1/16 |
| ஹ | அரைக்கால் (ஃசு) | 1/8 |

| | | |
|---|---|---|
| ஙீ | மூன்று வீசம் (ஙிசூ) | 3/16 |
| வ | கால் | 1/4 |
| ௨ | அரை | 1/2 |
| ௲ | முக்கால் (ஈது) | 3/4 |
| க | ஒன்று (முழு எண்) | 1 |

பின்ன இலக்க அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1/320 | ஒன்றின் பாகம் | = | முந்திரி | 1/320 | வது |
| 2 | முந்திரி | = | அரைக்காணி | 1/160 | ஶ |
| 2 | அரைக்காணி | = | காணி | 1/80 | - |
| 2 | அரைக்காணி | = | அரைமா | 1/40 | சு |
| 3 | காணி | = | முக்காணி | 3/80 | சூ |
| 2 | அரைமா | = | மா | 1/20 | ப |
| 2 | ஒருமா | = | இரண்டுமா | 1/10 | உ |
| 3 | ஒருமா | = | மூணுமா | 3/20 | ங |
| 2 | இரண்டுமா | = | நாலுமா | 1/5 | க |
| 5 | ஒருமா | = | கால் | 1/4 | வ |
| 10 | ஒருமா | = | அரை | 1/2 | ௨ |
| 15 | ஒருமா | = | முக்கால் | 3/4 | ௲ |
| 20 | ஒருமா | = | ஒன்று | 1 | க |

நாணயப்பகுதி பின்ன இலக்க அட்டவணை

| | | | | |
|---|---|---|---|---|
| 5 | முந்திரி | = | கால்வீசம் | ஒ |
| 2 | கால் வீசம் | = | அரைவீசம் | சுஶ |
| 3 | கால் வீசம் | = | முக்கால் வீசம் | கூ |
| 2 | அரை வீசம் | = | வீசம் | (ய) ப- |
| 2 | வீசம் | = | கால் | வ |
| 2 | கால் | = | அரை | (இ) ௨ |
| 3 | கால் | = | முக்கால் | ௲ |
| 4 | கால் அல்லது | | | |
| 2 | அரை | = | ஒன்று (முழு எண்) | க |

பின்ன இலக்கத்தை முழு எண்ணால் பெருக்கும் வாய்ப்பாடு

| | | |
|---|---|---|
| க | (வது) | வது |
| ௰ | .... | சுஶ |
| ௱ | .... | வய |
| உ | .... | ங |

| | | |
|---|---|---|
| ௭ | .... | சூழ |
| ௭௰ | .... | வஙீ |
| ௭௱ | .... | ௪ வஹு |
| ௮ | .... | ப |
| ௮௰ | .... | ஒ |
| ௮௱ | .... | ௫ |
| ௯ | .... | பழ |
| ௯௰ | .... | ஒப - |
| ௯௱ | .... | ௫ ஒஹு |
| ௲ | .... | கா வ |
| | | |
| ௧ | ( – ) | – |
| ௰ | .... | ஹு |
| ௱ | .... | கவ |
| ௨ | .... | சு |
| ௨௰ | .... | வ |
| ௨௱ | .... | ௨ஒ |
| ௩ | .... | சூ |
| ௩௰ | .... | வஹு |
| ௩௱ | .... | ௩ஈத |
| ௪ | .... | ப |
| ௪௰ | .... | ஒ |
| ௪௱ | .... | ௫ |
| ௫ | .... | ப - |
| ௫௰ | .... | ஒஹு |
| ௫௱ | .... | ௬ வ |
| ௬ | .... | பசு |
| ௬௰ | .... | ஈத |
| ௬௱ | .... | எஒ |
| ௭ | .... | பசூ |
| ௭௰ | .... | ஈதஹு |
| ௭௱ | .... | அத |
| ௮ | .... | ஐ |
| ௮௰ | .... | ௧ |
| ௮௱ | .... | ௰ |
| ௯ | .... | ஐ - |
| ௯௰ | .... | ௧ஹு |
| ௯௱ | .... | ௰கவ |
| ௲ | .... | ௰௨ஒ |
| | | |
| ௧ | (சு) | சு |
| ௰ | .... | வ |
| ௱ | .... | ௨ஒ |

| | | |
|---|---|---|
| ௬௱ | .... | ௨௰௨ஒ |
| ௭ | .... | வ - |
| ௭௰ | .... | ௨ஒஹு |
| ௭௱ | .... | ௨௬ வ |
| ௮ | .... | வப |
| ௮௰ | .... | ௩ |
| ௮௱ | .... | ௩௰ |
| ௯ | .... | வபசூ |
| ௯௰ | .... | ௩வஹு |
| ௯௱ | .... | ௩௰௩ஞ |
| ௲ | .... | ௩௰எஒ |

| | | |
|---|---|---|
| ௧ | (ப) | ப |
| ௰ | .... | ஒ |
| ௱ | .... | ௫ |
| ௨ | .... | ஃ |
| ௨௰ | .... | ௧ |
| ௨௱ | .... | ௰ |
| ௩ | .... | ஙி |
| ௩௰ | .... | ௧ஒ |
| ௩௱ | .... | ௰ ௫ |
| ௪ | .... | கி |
| ௪௰ | .... | ௨ |
| ௪௱ | .... | ௨௰ |
| ௫ | .... | வ |
| ௫௰ | .... | ௨ஒ |
| ௫௱ | .... | ௨௰ ௫ |
| ௬ | .... | வப |
| ௬௰ | .... | ௩ |
| ௬௱ | .... | ௩௰ |
| ௭ | .... | வஃ |
| ௭௰ | .... | ௩ஒ |
| ௭௱ | .... | ௩௰ ௫ |
| ௮ | .... | வஙி |
| ௮௰ | .... | ௪ |
| ௮௱ | .... | ௪௰ |
| ௯ | .... | வகி |
| ௯௰ | .... | ௪ஒ |
| ௯௱ | .... | ௪௰ ௫ |
| ௲ | .... | ௫௰ |

| | | |
|---|---|---|
| ௧ | (ப -) | ப - |
| ௰ | .... | ஒஹு |
| ௱ | .... | ௬ வ |

| | | |
|---|---|---|
| ௨ | .... | ஹு |
| ௨௰ | .... | ௧வ |
| ௨௱ | .... | ௰௨ஃ |
| ௩ | .... | ஙீ |
| ௩௰ | .... | ௧ஹு ஹு |
| ௩௱ | .... | ௰௮ஹு |
| ௪ | .... | வ |
| ௪௰ | .... | ௨ஃ |
| ௪௱ | .... | ௨௰௫ |
| ௫ | .... | வப- |
| ௫௰ | .... | ௩ஹு |
| ௫௱ | .... | ௩௰௧வ |
| ௬ | .... | வஹு |
| ௬௰ | .... | ௩ஹு |
| ௬௱ | .... | ௩௰௭ஃ |
| ௭ | .... | வஙீ |
| ௭௰ | .... | ௪வஹு |
| ௭௱ | .... | ௪௰௩ஹு |
| ௮ | .... | ஃ |
| ௮௰ | .... | ௫ |
| ௮௱ | .... | ௫௰ |
| ௯ | .... | ஃப- |
| ௯௰ | .... | ௫ஃஹு |
| ௲ | .... | ௬௰௨ஃ |
| | | |
| ௧ | (ஓ) | ஓ |
| ௰ | .... | ௧ |
| ௱ | .... | ௰ |
| ௨ | .... | ஸி |
| ௨௰ | .... | ௨ |
| ௨௱ | .... | ௨௰ |
| ௩ | .... | வப |
| ௩௰ | .... | ௩ |
| ௩௱ | .... | ௩௰ |
| ௪ | .... | வஙி |
| ௪௰ | .... | ௪ |
| ௪௱ | .... | ௪௰ |
| ௫ | .... | ஃ |
| ௫௰ | .... | ௫ |
| ௫௱ | .... | ௫௰ |
| ௬ | .... | ஃஓ |
| ௬௰ | .... | ௬ |
| ௬௱ | .... | ௬௰ |

| | | |
|---|---|---|
| எ | .... | ஒகி |
| எய | .... | எ |
| எ௱ | .... | எய |
| அ | .... | பஞ |
| அய | .... | அ |
| அ௱ | .... | அய |
| கூ | .... | ஙிஞ |
| கூய | .... | கூ |
| கூ௱ | .... | கூய |
| தூ | .... | ௱ |
| | | |
| க | (ஹு) | ஹு |
| ய | .... | கவ |
| ௱ | .... | யஉஒ |
| உ | .... | வ |
| உய | .... | உஒ |
| உ௱ | .... | உயரு |
| ந | .... | வஹு |
| நய | .... | நஞ |
| ந௱ | .... | நயஎஒ |
| ச | .... | ஒ |
| சய | .... | ரு |
| ச௱ | .... | ருய |
| ரு | .... | ஒஹு |
| ருய | .... | சா வ |
| ரு௱ | .... | சா யஉஒ |
| சா | .... | ஞ |
| சா ய | .... | எஒ |
| சா ௱ | .... | எயரு |
| எ | .... | ஞஹு |
| எய | .... | அஞ |
| எ௱ | .... | அயஎஒ |
| அ | .... | க |
| அய | .... | ய |
| அ௱ | .... | ௱ |
| கூ | .... | கஹு |
| கூய | .... | யகவ |
| கூ௱ | .... | ௱யஉஒ |
| தூ | .... | ௱உயரு |
| | | |
| க | (ஙி) | ஙி |
| ய | .... | கஒ |
| ௱ | .... | யரு |
| உ | .... | வப |

உய .... ந
உா .... நய
ந .... வகி
நய .... ச௨
நா .... சயஞ
ச .... ௨ஓ
சய .... கா
சா .... காய
ஞ .... ஜ
ஞய .... எ௨
ஞா .... எஞ
கா .... ஜஙி
காய .... கூ
காா .... கூய
எ .... கப
எய .... ய௨
எா .... ாஞ
அ .... ககி
அய .... யஉ
அா .... ாஉய
கூ .... கவஓ
கூய .... யந௨
கூா .... ாநயஞ
சூ .... ாஞய

க (ஙீ) ஙீ
ய .... கஜஹு
ா .... யஅஜ
உ .... வஹு
உய .... நஷ
உா .... நயஎ௨
ந .... ௨ப-
நய .... ஞ௨ஹு
நா .... ஞகள வ
ச .... ஜ
சய .... எ௨
சா .... எயஞ
ஞ .... ஜஙீ
ஞய .... கள வஹு
ஞா .... கள யநஜ
கா .... கஹு
காய .... யகவ
காா .... ாயஉ௨
எ .... கவப-

| | | |
|---|---|---|
| உா | .... | ருய |
| ந | .... | ஐ |
| நய | .... | ளஒ |
| நா | .... | ளயரு |
| ச | .... | க |
| சய | .... | ய |
| சா | .... | ா |
| ரு | .... | கவ |
| ருய | .... | யஉஒ |
| ருா | .... | ாஉரு |
| சூ | .... | கஒ |
| சூய | .... | யரு |
| சூா | .... | ாருய |
| ள | .... | கஐ |
| ளய | .... | யளஒ |
| ளா | .... | ாளரு |
| அ | .... | உ |
| அய | .... | உய |
| அா | .... | உா |
| கூ | .... | உவ |
| கூய | .... | உஉஒ |
| கூா | .... | உஉரு |
| க்ஷ | .... | உருய |

| | | |
|---|---|---|
| க | (ஒ) | ஒ |
| ய | .... | ரு |
| ா | .... | ருய |
| உ | .... | க |
| உய | .... | ய |
| உா | .... | ா |
| ந | .... | கஒ |
| நய | .... | யரு |
| நா | .... | ாருய |
| ச | .... | உ |
| சய | .... | உய |
| சா | .... | உா |
| ரு | .... | உஒ |
| ருய | .... | உரு |
| ருா | .... | உருய |
| சூ | .... | ந |
| சூய | .... | நய |
| சூா | .... | நா |
| ள | .... | நஒ |
| ளய | .... | நரு |

| | | |
|---|---|---|
| ௭௱ | .... | ௩௫௰ |
| ௮ | .... | ௪ |
| ௮௰ | .... | ௪௰ |
| ௮௱ | .... | ௪௱ |
| ௯ | .... | ௪𑿑 |
| ௯௰ | .... | ௪௫ |
| ௯௱ | .... | ௪௫௰ |
| ௲ | .... | ௫௱ |

| | | |
|---|---|---|
| ௧ | (𑿓) | 𑿓 |
| ௰ | .... | ௭𑿑 |
| ௱ | .... | ௭௫ |
| ௨ | .... | ௧𑿑 |
| ௨௰ | .... | ௰௫ |
| ௨௱ | .... | ௱௫௰ |
| ௩ | .... | ௨வ |
| ௩௰ | .... | ௨௨𑿑 |
| ௩௱ | .... | ௨௨௫ |
| ௪ | .... | ௩ |
| ௪௰ | .... | ௩௰ |
| ௪௱ | .... | ௩௱ |
| ௫ | .... | ௩𑿓 |
| ௫௰ | .... | ௩௭𑿑 |
| ௫௱ | .... | ௩௭௫ |
| ௬ | .... | ௪𑿑 |
| ௬௰ | .... | ௪௫ |
| ௬௱ | .... | ௪௫௰ |
| ௭ | .... | ௫வ |
| ௭௰ | .... | ௫௨𑿑 |
| ௭௱ | .... | ௫௨௫ |
| ௮ | .... | ௬ |
| ௮௰ | .... | ௬௰ |
| ௮௱ | .... | ௬௱ |
| ௯ | .... | ௬𑿓 |
| ௯௰ | .... | ௬௭𑿑 |
| ௯௱ | .... | ௬௭௫ |
| ௲ | .... | ௭௫௰ |

கீழ்வாய் இலக்கம்

| | | |
|---|---|---|
| 𑿓 | (𑿓) | 𑿑ப − |
| 𑿑 | .... | வஹு |
| வ | .... | ஙீ |
| ஙீ | .... | ஹு − |
| ஹு | .... | ப − சு |

| | | |
|---|---|---|
| ப – | .... | சூ |
| சூ | .... | சுவத |
| சு | .... | – ஶ |
| – | .... | ஶவத |
| ஶ | .... | வதகீ ௨ |
| வத | .... | கீ ஜ |
| | | |
| ௨ | (௨) | வ |
| வ | .... | ஹு |
| ஙீ | .... | ப – சு |
| ஹு | .... | ப – |
| ப – | .... | சு |
| சூ | .... | – ஶ |
| சு | .... | – |
| – | .... | ஶ |
| ஶ | .... | வத |
| வத | .... | கீ ௨ |
| | | |
| வ | (வ) | ப – |
| ஙீ | .... | சூ |
| ஹு | .... | சு |
| ப – | .... | – |
| சூ | .... | ஶவத |
| சு | .... | ஶ |
| – | .... | வத |
| ஶ | .... | கீ ௨ |
| வத | .... | கீ வ |
| | | |
| ஙீ | (ஙீ) | சுவத |
| ஹு | .... | – ஶ |
| ப – | .... | ஶவத |
| சூ | .... | ஶகீ வ |
| சு | .... | வதகீ ௨ |
| – | .... | கீ ஜ |
| ஶ | .... | கீ வஹு |
| வத | .... | கீ ஙீ |
| | | |
| ஹு | (ஹு) | – |
| ப – | .... | ஶ |
| சூ | .... | வதகீ ௨ |
| சு | .... | வத |
| – | .... | கீ ௨ |
| ஶ | .... | கீ வ |

| | | |
|---|---|---|
| வது | .... | கீ ஹு |
| | | |
| ப - | (ப - ) | வது |
| சூ | .... | கீ வது |
| சு | .... | கீ ௨ |
| - | .... | கீ வ |
| டு | .... | கீ ஹு |
| வது | .... | கீ ப - |
| | | |
| டு | (சூ) | கீ ௨ ப - |
| சூ | .... | கீ வஹு |
| - | .... | கீ ஙி |
| டு | .... | கீ ப - சு |
| வது | .... | கீ சூ |
| | | |
| சு | (சு) | கீ வ |
| - | .... | கீ ஹு |
| டு | .... | கீ ப - |
| வது | .... | கீ சு |
| | | |
| - | ( - ) | கீ ப - |
| டு | .... | கீ சு |
| வது | .... | கீ - |
| | | |
| டு | (டு) | கீ - |
| வது | .... | கீ டு |
| | | |
| வது | (வது) | கீ வது |

நெல் இலக்கம்

| | |
|---|---|
| களூ | 1 செவிடு |
| உளூ | 2 செவிடு |
| ஙளூ | 3 செவிடு |
| சளூ | 4 செவிடு |
| ளு | ஆழாக்கு (5 செவிடு) |
| து | உழக்கு |
| துளு | மூவாழாக்கு |
| வரி | உரி (1/2 படி) |
| ஈது | மூவுழக்கு |
| ஈதுளு | 7 ஆழாக்கு |
| உ | 1 படி |

| | |
|---|---|
| ங | 1 மரக்கால் (8 படி) |
| ஷு | பதக்கு (2 குறுணி) |
| ஞ | முக்குறுணி |
| த | 4 மரக்கால் (1 தூணி) |
| தங | 5 மரக்கால் |
| தஷு | 6 மரக்கால் |
| தஞ | 7 மரக்கால் |
| ஷத | 8 மரக்கால் (இரு தூணி) |
| ஷதங | 9 மரக்கால் |
| ஷதஷு | 10 மரக்கால் |
| ஷதஞ | 11 மரக்கால் |
| கூ | 12 மரக்கால் (1 கலம்) |
| கூ ங | 13 மரக்கால் |
| கூ ஷு | 14 மரக்கால் |
| கூ ஞ | 15 மரக்கால் |
| கூ த | 16 மரக்கால் |
| கூ ஷத | 20 மரக்கால் |

நிறுத்தல் அளவை

| | | |
|---|---|---|
| 32 குன்றிமணி | = | 1 வராகனெடை |
| 10 வராகனெடை | = | 1 பலம் |
| 180 தானியமணி | = | 1 தோலா அல்லது 1 ரூபாவெடை |
| 3 தோலா | = | 1 பலம் |
| 8 பலம் | = | 1 சேர் |
| 5 சேர் | = | 1 வீசை |
| 8 வீசை | = | 1 மணங்கு |
| 20 மணங்கு அல்லது 500 இராத்தல் | = | 1 பாரம் |

சாதாரணமாய்த் தமிழ்நாட்டில்
தொன்றுதொட்டு வழங்கிவரும் அளவை

| | | |
|---|---|---|
| 360 நெல் | = 1 செவிடு | ஜூ |
| 5 செவிடு | = 1 ஆழாக்கு | ஜு |
| 2 ஆழாக்கு | = 1 உழக்கு | ஜ |
| 2 உழக்கு | = 1 உரி | ஷரி |
| 3 உழக்கு | = மூவுழக்கு | ஈத |
| 2 உரி | = 1 நாழி | உ |
| 8 நாழி (படி) | = 1 குறுணி (மரக்கால்) | ங |
| 2 குறுணி | = 1 பதக்கு | ஷு |
| 3 குறுணி | = 1 முக்குறுணி | ஞ |

| | | |
|---|---|---|
| 2 பதக்கு (4 குறுணி) | = 1 தூணி | த |
| 2 தூணி | = 8 குறுணி | வத |
| 3 தூணி | = 1 கலம் | சூ , ள |
| 5 மரக்கால் | = 1 பாறை | |
| 80 பறை அல்லது 400 மரக்கால் | = 1 கரிசை | |

தஞ்சாவூர் நில அளவை

| | |
|---|---|
| 144 சதுர அடி | = 12 அடிகோலால் 1 குழி |
| 100 குழி | = 1 மா |
| 20 மா | = 1 வேலி |
| 10 மைல் | = 1 தமிழ்காதம் அல்லது 7-1/2 நாழிகை வழி தூரம் |

தமிழ்க்கால அளவை

| | |
|---|---|
| 60 விநாடி | = 1 நாழிகை |
| 2-1/2 நாழிகை | = 1 ஓரை |
| 3-3/4 நாழிகை | = 1 முகூர்த்தம் |
| 7-1/2 நாழிகை | = 1 சாமம் |
| 8 சாமம் | = 1 நாள் |
| 7 நாள் | = 1 கிழமை |
| 15 நாள் | = 1 பக்கம் |
| 30 நாள் | = 1 திங்கள் |
| 6 திங்கள் | = 1 அயனம் |
| 2 அயனம் | = 1 ஆண்டு |

தமிழ் நீட்டலளவை

| | | |
|---|---|---|
| 8 அணு | = | 1 கதிரெழு துகள் |
| 8 கதிரெழு துகள் | = | 1 பஞ்சுத் துகள் |
| 8 பஞ்சுத் துகள் | = | 1 மயிர்முனை |
| 8 மயிர்முனை | = | 1 நுண்மணல் |
| 8 நுண்மணல் | = | 1 சிறுகடுகு |
| 8 சிறுகடுகு | = | 1 எள்ளு |
| 8 எள்ளு | = | 1 நெல்லு |
| 8 நெல்லு | = | 1 விரற்கிடை |
| 12 விரற்கிடை | = | 1 சரண் |
| 2 சாண் | = | 1 முழம் |
| 12 முழம் | = | 1 சிறுகோல் |
| 500 சிறுகோல் | = | 1 கூப்பிடுதூரம் |
| 4 கூப்பிடுதூரம் | = | 1 காதம் |
| 4 காதம் | = | 1 யோசனை |

மனை அளவு

40 அடி அகலம் }<br>60 அடி நீளம் } உள்ள 1 மனை

தமிழ் நிறுத்தலளவை

| | | |
|---|---|---|
| 1 நெல்லெடை | = | 1 வீசம் |
| 2 வீசம் | = | 1 பிளவு |
| 2 பிளவு | = | 1 குன்றிமணி |
| 2 குன்றிமணி | = | 1 மஞ்சாடி |
| 2 மஞ்சாடி | = | 1 பணஎடை |
| 5 மஞ்சாடி | = | 1 கழஞ்சு |
| 2 கழஞ்சு | = | 1 கஃசு* (1/4 பலம்) |
| 4 கஃசு | = | 1 பலம் |
| 100 பலம் | = | 1 தூக்கு |
| 2 தூக்கு | = | 1 துலாம் |
| 32 துலாம் | = | 1 பாரம் |
| 2 துலாம் | = | 1 பிசு |
| 32 குன்றிமணி | = | 1 வராகனெடை |
| 9 வராகனெடை | = | 1 ஒஞ்சை |
| 9 ஒஞ்சை | = | 1 சேர் |
| 16 மஞ்சாடி | = | 1 வராகனெடை |
| 9 பணவெடை | = | 1 பூவராகன் |
| 10 பணவெடை | = | 1 கழஞ்சு |
| 10 பணவெடை | = | 1/8 ரவை மஞ்சாடி |
| | = | 1 கழஞ்சு பழகம் |
| 10-1/2 மாத்துடையது | = | தங்கம் |
| 3-1/2 மாத்துடையது | = | வராகன் |
| 1/16 வராகனெடை | = | 1 ரதி (பச்சை) |

* கைசா என்றும் பாடம்.

துணிகளின் அளவை

| | | |
|---|---|---|
| 18 முழம் கொண்டது | = | 1 புடைவை |
| 8 புடைவை | = | 1 சாம்பு |
| 80 சாம்பு | = | 1 கோடி |
| 2 வேட்டி | = | 1 சோடி |
| 2 சோடி (அல்லது) 4 வேட்டி | = | 1 மடி |
| 5 மடி | = | 1 கோடி |

1 கோடி என்பது 2-1/2 சவுக்களி

கால்நடைகள் கணக்கு

80 ஆடு }<br>80 பசு } கொண்டது = 1 நிரை (மந்தை)<br>80 எருமை }

# கணக்கதிகாரம்

## மூலமும் உரையும்

*பாயிரம்*

**காப்பு**

விநாயகர்

வெண்பா

இக்கணக்கில் ஒன்றும் இடையூறு வாராமல்
முக்கண்ணன் பெற்ற முதல்வனே - இக்குமொழிக்
கானக் குறவள்ளி காவலற்கு முன்வந்த
ஆனை முகனே அருள். (க)

**முருகக்கடவுள்**

அறுசீராசிரிய விருத்தம்

புல்லசுரர் களைகளைந்து வானவர்கள்
சிறைமீட்டுப் புவியோர் வாழ்த்தத்
தொல்லையறு தலத்துவந்த மயிலோனைச்
சிவசுப்பிர மணிய வேளை
நல்லவர்கள் அகத்திருக்கும் சண்முகனை
மாறாமல் நண்ணி யேத்தி
வல்லவர்கள் எடுத்துரைத்த கணக்கதிகா
ரத்தினையான் வழுத்து வேனே. (உ)

**திருமால்**
**வெண்பா**

சீர்படைத்த உந்திச் செழுங்கமல மேலயனைப்
பார்படைக்க என்று படைத்தருளும் - சார்படைத்த
ஓதமா மேனி உரவோன் உலகளந்த
பாதமே நாயேற்குப் பற்று. (ந)

**கலைமகள்**
**வெண்பா**

எப்போதுஞ் சிந்தித் திருப்பேன் எழுத்தெண்ணும்
தப்பாமல் என்றுந் தலைநிற்க - முப்போதும்
பூவகத்தான் நாவகத்தே புல்குவாள் என்னுடைய
நாவகத்தே வீற்றிருக்க நான். (சு)

அம்பலவாணர்
அறுசீராசிரிய விருத்தம்

அங்கமறைக் கெட்டாப்பொன் அம்பலத்தே
நடனமுயன் றடியர் உள்ளச்
செங்கமலத் தெழுந்தேனைச் சிவகாம
வல்லிமகிழ் தெய்வந் தன்னை
மங்களநித் தியவடிவைச் சின்மயா
நந்தபர வாழ்வைப் போற்றித்
துங்கமுறுங் கணக்கதிகா ரத்தினையான்
குறையாமற் சொல்லு வேனே. (ரு)

மலைமகள்

அடியார்கள் உளத்தூறும் ஆரமுதை
அரன்பாகத் தணங்க னாளைக்
கொடிபோலும் இடையாளை மலையரையன்
திருமகளைக் குமர வேளை
மடிமேல்வைத் தமுதூட்டும் சங்கரியை
உமையவளை மனத்தில் உன்னிப்
படிமீது கணக்கதிகா ரத்தினையான்
பண்பாகப் பகரு வேனே. (சு)

அவையடக்கம்

ஆரிய மொழியால் முன்னர் அந்தணர் எடுத்து ரைத்த
கூரிய கணித நூலைக் குவலயந் தன்னில் யானும்
சூரியன் தனக்கு நேரே தோன்றுமின் மினிப்பு முப்போல்
சீரிய தமிழால் சொல்வேன் சிறந்தவர் இகழார் அம்மா. (எ)

நூல் வகை
வெண்பா

ஆதிநிலம் பொன்னெல் அரிசி அகலிடத்து
நீதிதருங் கால்கல்லே நேரிழையாய் - ஓதி
உறுவதுவா கச்சமைத்தேன் ஒன்றொழியா வண்ணம்
அறுபதுகா தைக்கே அடைத்து. (எ)

உரை : செம்மையான அணிகலங்களை அணிந்தவளே! இந்நிலத்திலே வழங்குகின்ற வினாவனைத்தும் ஆறு விகற்பத்திலே வழங்குமென்பதனால்; அவ் விகற்பம் ஆறாவன : நிலவழி, பொன்வழி, நெல்வழி, அரிசிவழி, கால்வழி, கல்வழி என்கின்ற ஆறு விகற்பத்தையும் அறுபது சூத்திரத்திலே உரைப்பன். இஃதன்றிப் புறச்சூத்திரம் வரினும் கண்டு கொள்க. (அ)

அறுபது மேல்நான்கு சூத்திரமுண் டென்றும்
அறுபதே ஆகும் அதனால் - குறியாப்
புறமொன்ற மற்றவைகொள் பொற்பூந் தளிரின்
நிறமொன்று மாதே நினை.

உரை : செம்மையான அணிகலன்களை அணிந்தவளே! பொன்னாலாகிய மாந்தளிர் போன்ற மேனியை உடையவளே! ஆகச் சூத்திரம் அறுபது. இதற்கு மேற் சூத்திரம் நான்கு உட்பட அறுபத்து நான்கு சூத்திரம் என்று உரைப்பாரும் உளர். இவ்வாறு வருவனவும் அல்லாமல் புறச்சூத்திரம் வரினுங் கண்டுகொள்க. (கூ)

இருபதும் மூன்றும் இருபதும் ஓராறும்
ஒருபதின்மேல் எட்டொழிந்த ஒன்றும் - நிருமித்த
மூன்றும்அதன் பின்னைந்தும் ஆகும் முகிழ்நகையாய்
ஆன்ற அறுப தவை.

உரை : ஒளி தங்கிய பற்களையுடையவளே! நிலத்துக்கினம் இருபத்து மூன்று (உங). பொன்னுக்கினம் இருபது (உ0). நெல்லுக்கினம் ஆறு (சா). அரிசிக்கினம் இரண்டு (உ). காலுக்கினம் மூன்று (ங). கல்லுக்கினம் ஒன்று (க). பொதுவுக்கினம் ஐந்து (ரு). ஆக அறுபதும் (சா0) கண்டு கொள்க. (க0)

பன்னு வடசொல் பனுவல்தனை இப்பொழுது
கன்னித் தமிழ்வாயால் கட்டுரைத்தேன் - முன்னம்
மகிழ்கின்ற எண்ணின்வழி வந்தகணக் கெல்லாம்
இகழ்வின்றி யேயுரைப்பேன் யான்.

உரை : வடமொழியில் வழங்கும் நூல்கட்கு அஞ்சனம் என்றும், செய்தவம் என்றும், கோவிந்தனார் படிகம் என்றும், புவனதீபம் என்றும், கணிதரத்தினம் என்றும் பெயர்கள் உள்ளன. இவைகளைத் தமிழாகச் செய்த நூல்கட்குக் கணக்கதிகாரம் என்றும், [1]ஏரம்பம் என்றும், கிளராலையம் என்றும், அதிசாகரம் என்றும், கலம்பகம் என்றும், திரிபுவன திலகம் என்றும், கணிதரத்தினம் என்றும், சிறுகணக்கு என்றும் பெயர்கள் உள்ளன. இந்நூல்கள் பலவற்றையும் முகவுரையிலே தெரியுமாறு பார்த்து வருகையில் முகவுரை சூத்திரக் கணக்கதிகாரம் என்று பல தொகையெல்லாந் தொகுத்து முகவுரையிலே எல்லாக் கணக்கும் அறியச் சொன்னவாறு கண்டுகொள்க.

---

1. ஓரம்பம் என்பதும் பாடம்.

## ஆக்கியோன் பெயர்

அகவல்

பொன்னி நாட்டுப் பொருந்திய புகழோன்
மன்னர் கோமான் வழிமுதல் உடையோன்
முத்தமிழ் தெரிவோன் முகரியம் பெரும்பதி
மத்திமத் தலத்தின் மறையவர் வாழும்
குற்றமில் காட்சிக் கொறுக்கையர் கோமான்
புத்தன் புதல்வன் காரிஎன் பவனே.

## இதுவும் அது
**வெண்பா**

எண்ணில்இசை யாது வருங்கணக் கையெல்லாம்
மண்ணுலகில் யார்க்கும் வழங்கினான் - ஒண்ணுதலாய்
பாரை முழுதும் பரித்த புகழ்க்கொறுக்கைக்
காரி கணக்கணவன் காண்.

உரை : ஒளிபொருந்திய நெற்றியை உடையாய்! காரிநாயனார் எனவே ஆக்கியோன் பெயரும், முனிவர்கள் சொல்லிய ஆரிய நூலின் வழியே யான் கூறியதெனவே வழியும், தமிழ்வரம்பிற்கு உட்பட்ட முகரி எனவே நகர் எல்லையும், கணக்கதிகாரம் எனவே நூற்பெயரும், தொகை விரி விருத்தத் தொகைகள் எனவே யாப்பும், கணக்கின் விவரத்தின் புகழ் எனவே நூலின் ஐம்பொருளும், முகரி என்னும் பெரும்பதியின் முற்றுணர்ந்தோர்கள் கூறுக; எனவே கேட்போரும், நெல்லுக்கினம், பொன்னுக்கினம், நிலத்துக்கினம், அரிசிக்கினம், கலத்துக்கினம், காலுக்கினம், பொதுவுக்கினமான பாதங்களினால் வருந்தொகையெனவே பயனும், அப்பெரியோர்கள் கேட்டதெனவே காலமும், அந் நகரத்திருந்த பெரியோர் முன்னர் அரங்கேற்றியதெனவே களனும், பெரியோர் கூறிய வாய்மையால் சொல்லிமுடித்தாம் என்னும் காரணமும் ஆகிய பதினொரு வகைச் சிறப்புக்களையும் யாவரும் எளிதில் உணருமாறு, குணரத்தின ஞான தீபகமாகிய புலவர் பெருமான், புராரி நாயனாருடைய புகழ்போல் விளங்கின பத்தழகுகளும், முப்பத்திரண்டு தந்திரயுத்திகள் முதலியனவும் இந் நூலில் அமைந்து கிடத்தலை ஆங்காங்கு உணர்க. (கஉ, கங)

பாயிரம் முற்றும்.

## நூல்
### கணித வகை
வெண்பா

ஒன்று கழஞ்ச நிறையொருகோல் காதநான்
நின்ற படியுரைப்ன் நேரிழையாய் - ஒன்றுமேல்
இந்த உலகத் திடையேயான் எண்ணின்வழி
வந்தகணக் கெல்லாம் வகுத்து.

உரை : மேன்மையாகச் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்தவளே! இந்தக் கணித நூலில் புறச்சூத்திரமெல்லாம் முதலாக எடுத்து முகவுரையிற் கூறுகின்றேன். ஒன்று கழஞ்சுநிறை ஒரு கோல் காதம் என்று அளவுதானம் பிறக்கும்படியும், பெருகுழி யளக்குமிடத்துக் கோலுக்கு மட்டுக்கொள்ளும்படியும், வழிக்கு நிலப்பணம் அறியும்படியும், வட்டத்துக்கு விட்டமும், விட்டத்துக்கு வட்டமும், அறிந்து குழி சொல்லும்படியும், சிறுகுழியளக்குமிடத்து அளந்த கோலுக்கு நெற்கடையறியும் படியும், அந்நிலத்தில் முதல் இடை கடை (உத்தமம், மத்திமம், அதமம்) அறியும்படியும், மோதிரக் கடைநிலத்துக்குக் குழிசொல்லும்படியும், காதத்துக்குக் காதம் நிலம் அறியும்படியும், பன்னிரண்டு (யஉ) அடி கோலால் குழி நூறு (ள) கொண்டது ஒரு மாநிலமாகப் பதினாறு (யசா) அடிகோலால் குழி நூற்று இருபதுக்கு (ளஉய எத்தனை மா என்றாலும், குழிக்கு நெல்லும், உழுதிறுக்கும் பொன்னும், பழுக்கும் பயிருக்கும் உள்நிலம் அறியும்படியும், பொன்விசலம் நெல்விசலம் பிறப்பிக்கும்படியும் நூறு (ள) குழி கொண்டது மா (ப) நிலமாக மா (ப) குழிக்கு நிலமறிந்து சொல்லும்படியும் நூறு (ள) குழி நிலமறியும்படியும், என்பது (அய) குழி கொண்டது மா (ப) நிலமாக மா (ப) குழிக்கும் நிலம் அறிந்து சொல்லும்படியும், நெல் மதிப்பும், நீர்ப்பாய்ச்சலும் இதற்கு உண்மாணப் பிரமாணம் அறியும்படியும்;

மரக்கால் நெல்லும், வேலியால் நெல்லும் பணத்துக்குக் கொள்ளும் நெல்லும், விற்கும் நெல்லும், நெல்லுக்குப் பணமும், ஆண்டுவரை சேவகருக் கிறுக்கப் பெறும் பொன்னும், பொன்னுக்குச் சேவிக்கும் நாளும், உழுதிறுக்கும் பொன்னும் பொன்னுக்கு நிலமும், நெல்வழியும் அரிசி வழியும் ஒருவன் வினவின பொருளுக்குப் பயனறியும்படியும், இவையெல்லாம் மூன்று தொகை, ஐந்து தொகை, ஏழு தொகை, ஒன்பது தொகை, பதினொரு தொகை, பதின்மூன்று தொகை, பதினைந்து தொகை இவைகளிற் கண்டுகொள்ளும்படியும், எள்ளு, நெல்லு, அரிசி, துவரை ஆகியவைகளை நாழியால் அளந்து இலக்கம் அறியும்படியும்;

நாழியால் அளந்த மண், மணல், உப்பு, தண்ணீர் பலமறியும்படியும், கற்பூரம் சந்தனம் முதலிய பலசரக்கு நிறையறியும்படியும், வைக்கோல் திரை, புல் கட்டு ஆகியவற்றின் நிறையும், மேனாட்டு மிளகளவும், மனை, கோயில், அரசர்கள் அரண்மனை வகுக்க முழங்கொள்ளும்படியும், நாழிகை வட்டில் அறியும்படியும், வெண்கலம் பித்தளை பிறப்பிக்கும்படியும், நாலுகால் விலங்கின் அகவையும், மகாபாரதத்துக்கு அணிவகுப்பு இலக்கம் அறியும்படியும், சதுரங்க அறைக்குத் தனிநெல் அறியும்படியும், பல வினாக்களும், பூமியும், கடல் அளவும், நான்கு யுகங்களின் ஆண்டும், நான்முகனின் அகவையும் சொல்லடைவிலே விரிவாகக் கண்டுகொள்க. (க)

## க. எண் அறிதல்

[மேலே தொகுத்துரைக்கப்பெற்றவை விரித்துரைக்கப் பெறுகின்றன.]

இம்மிதான் ஈரைந் தரையெனவே வைத்திதனைச்
செம்மைதருங் கீழ்முந் திரிசெய்து - பின்னவை
மூன்றுபடி பத்திரட்டி முந்திரியே ஒன்றென்றார்
ஆன்ற அறிவி னவர்.

உரை : இம்மி பத்தரை (௰௮) கொண்டது கீழ் முந்திரி; கீழ் முந்திரி முந்நூற்று இருபது (௩௨௰) கொண்டது மேல்முந்திரி; மேல்முந்திரி முந்நூற்று இருபது கொண்டது ஒன்று. (உ)

முந்திரிய ரைக்காணி முன்னிரண்டு பின்னிரண்டாய்
வந்ததோர் காணிநான் மாவாக்கி - ஒன்றோடு
நாலாக்கிக் காலாக்கி நன்னுதலாய் காலதனை
நாலாக்கி ஒன்றாக நாட்டு.

உரை : நல்ல நெற்றியை உடையவளே! முந்திரி இரண்டு கொண்டது அரைக்காணி (ற); அரைக்காணி இரண்டு கொண்டது காணி (-); காணி நான்கு (ச) கொண்டது மா(ப); மா ஐந்து கொண்டது கால் (வ); கால் நான்கு கொண்டது ஒன்று (க) எனப்பெறும்.

## உ. நிலவளம் அறிதல்

உற்றசீர் பூமி அதனில் ஒளிபவளம்
கொற்றவேற் கண்ணாய் குவளையெழும் - மந்தை
இடைநிலத்து வேல்துராய் என்றிவைகள் ஆகும்
கடைநிலத்து வெண்மைஉவர் காண்.

உரை : வெற்றி பொருந்திய வேலைப் போன்ற கண்களையுடையவளே! உத்தம நிலம் - குவளை, சடை, காந்தை, காவேடு, காவேளை, பவளக்கொடி, புல், சேற்றுப்பயிர் ஆக ஏழு. மத்திம நிலம் - செருப்படி, துராய், கண்டங்கத்திரி, வேல், அறுகு, சாமை, கேழ்வரகு ஆக ஏழு. அதமநிலம் - ஓடு, தலை, பொரி, விரை, துடப்பம், உவரெழும் வெண்மை நிலம் பருத்திக்குமாம். (ச)

## ௩. நுட்பம் அறிதல்

சின்னம்பத் தேழுக்கால் செப்புந் தொகை நுண்மை
நுண்மையில் மூன்று நுவல்இம்மி - இம்மி
இருபத் தரையொன்றாங் கீழாக வேதான்
வருமுந் திரியெனவே வாட்டு.

உரை : சின்னம் பத்துக் (ய) கொண்டது நுண்மை முந்திரி (ஹு); நுண்மை முந்திரி மூன்று கொண்டது இம்மி முந்திரி; இம்மி முந்திரி பத்தரை கொண்டது கீழ்வாய் முந்திரி (கீஹு); கீழ்வாய் முந்திரி; முந்நூற்றிருபது (௩௱உய) கொண்டது மேல்முந்திரி; மேல்முந்திரி முந்நூற்றிருபது கொண்டது ஒன்று எனப்பெறும். (ரு)

## ச. கழஞ்சு அறிதல்

பொன்றும் இரண்டாம் பிளவும்இரண் டாங்குன்றி
குன்றியு மஞ்சாடி ஐந்தாகும் - என்றும்
ஒருநாலொன் றாகுமென ஓதுவார் எங்கள்
திருமாதே தேனே தெளி.

உரை : திருமகளுக்கொப்பான அழகையும் தேனுக்கு ஒப்பான சொல்லையும் உடையவளே! தனி நெல்லின் எடை வீசம்; வீசம் இரண்டு கொண்டது பிளவு; பிளவு இரண்டு கொண்டது குன்றி; குன்றி இரண்டு கொண்டது மஞ்சாடி; மஞ்சாடி ஐந்து கொண்டது கால்கழஞ்சு. கால்கழஞ்சு நான்கு கொண்டது ஒரு கழஞ்சு. (சூ)

## ரு. எடை அறிதல்

கண்ட கழஞ்சிரண்டு கைசாக்கை சாநாலு
கொண்ட பலநூறு கூறுநிறை - கண்ட
இரண்டு துலாமுப்ப தோடிரண்டாம் பாரம்
திரண்ட இளமுலையாய் செப்பு.

உரை : திரட்சியும் இளமையும் பொருந்திய கொங்கைகளை உடையவளே! கழஞ்சு இரண்டு கொண்டது கைசா; கைசா நான்கு கொண்டது பலம்; பலம் நூறு கொண்டது நிறை; நிறை இரண்டு கொண்டது துலாம்; துலாம் முப்பத்திரண்டு கொண்டது பாரம். (எ)

## சூ. நாழிக்குப் பலம் அறிதல்

மண்ணும் மணலும் ஒருநாழி வைத்தவெடை
எண்ணிற் பதினே ழிருபதாம் - நண்ணரிசி
ஐங்காலும் ஐயரையும் அத்துடனே பத்திரட்டி
பங்காகு முன்பின் பலம்.

உரை : நாழி மண்ணுக்குப் பலம் பதினெழு என்றும்; நாழி மணலுக்குப் பலம் இருபது என்றும்; நாழி நெல்லுக்குப் பலம் ஆறு என்றும்; நாழி அரிசிக்குப் பலம் பத்து என்றும்; நாழி உப்புக்குப் பலம் பதினாறு என்றும் சொல்லப்படும். (அ)

## எ. நாழிக்கு எண் அறிதல்

நூறா யிரத்தொருபத் தையா யிரத்திரு
நூறா மெள்ளோர்நாழி நெல்லதனைக் - கூறுங்கால்
சொல்லிய லக்கம் தொகையீரேழ் நானூறு
நல்லரிசி ஈரொன்பான் நாட்டு.

உரை : நாழி எள்ளில் நூற்றுப் பதினையாயிரத்து இருநூறு (௱௰௫௲௨௱) எள்ளுகள்; நாழி நெல்லில் பதினாலாயிரத்து நானூறு (௰௪௲௪௱) நெல்கள்; நாழி அரிசியில் முப்பத்தெண்ணாயிரம் (௩௰௮௲) அரிசிகள் அடங்கியுள்ளன என்று கூறப்பெறும். (௯)

நாழி பயறுபதி னாலா யிரத்தெண்ணூ(று)
ஆழித் திருவே! அவரைதான் - கூறியிடில்
ஓரா யிரத்தெண்ணூ றென்றார் மிளகுபன்
னீரா யிரத்தெண்ணூ றெண்.

உரை : திருப்பாற்கடலிற் பிறந்த திருமகளுக்கொப்பானவளே! நாழி பயற்றில் பதினாலாயிரத்து எண்ணூறு (௰௪௲௮௱) பயறுகள்; நாழி அவரைக் கொட்டையில் ஆயிரத்து எண்ணூறு (௲௮௱) அவரைக் கொட்டைகள்; நாழி மிளகில் பன்னீராயிரத்து எண்ணூறு (௰௨௲௮௱) மிளகுகள் அடங்கியுள்ளன என்று கூறப்பெறும். (க0)

## அ. கற்பூரம் முதலியவற்றின் நிறையறிதல்

அஞ்சேழ் கழஞ்சினெடை ஆழாக்குக் கற்பூரம்
கொஞ்சு கிளிமொழியே கூறுங்கால் - விஞ்சாது
நன்றான தண்ணீர்க்கு நாழிபலம் பன்னிரண்டாம்
என்றாயும் எழிரண்டாம் எண்.

உரை : கொஞ்சுகின்ற கிளிக்கு ஒப்பாகிய சொல்லையுடையவளே! முப்பத்தைந்து கழஞ்சு கற்பூரம் ஓர் ஆழாக்கு என்றும், அதுவே ஒரு குதிரம் என்றுஞ் சொல்லப்பெறும். நாழி ஒன்றுக்கு உத்தமத் தண்ணீர் பலம். பன்னிரண்டு என்றும், நாழி ஒன்றுக்கு மத்திமத் தண்ணீர் பலம் பதின்மூன்று என்றும், நாழி ஒன்றுக்கு அதமத் தண்ணீர் பலம் பதினான்கு என்றுஞ் சொல்லப்பெறும். (கக)

## கூ. வைக்கோல் முதலியவற்றின் நிறையறிதல்

வைக்கோல் திரைகல் இருதூணி நெற்பாரம்
உப்புரைக்கின் கல்தூணி உள்ளநிறை - புற்கட்டு
எட்டெட்டு நாராசம் என்பர்மிள கின்பாரம்
மட்டிட்டுச் சொல்வர் மதித்து.

உரை : கல்லே இருதூணி நெற்பாரம் ஒருவைக்கோற் கட்டு என்றும், கல்லே தூணி உப்பின்பாரம் ஒருபுறக்கட்டு என்றும், மலைநாட்டு நாழிக்குப்பேர் நாராசம் என்றும் இந்த நாராசம் சூயச கொண்டது ஒரு பாரம் மிளகு என்றும் வழங்கப்பெறும். (கஉ)

### க0. நாழிகை வட்டில் அறிதல்

மட்டாறு விட்டம் விரலிட்டு வன்செம்பு
கொட்டார் பதின்பலமாங் கொள்ளுமுளை - கட்டாணி
நாலெட்டு நான்மாப்பொன் நாலுவிரல் நாழிகையின்
பால்வட்டிற் பாதிமதிப் பாம்.

உரை : பலமாகிய செம்புவட்டில் கொட்டுமிடத்து மட்டு ஆறுவிரல்விட்டம் பன்னிரண்டு விரல் இப்படிக் கொட்டின வட்டிலுக்குத் தொளைவிடுவதற்கு முப்பத்தாறு மாப் பொன்னாலே, நான்குவிரல் அளவு ஊசி செய்து அந்த ஊசியாலே தொளையிட்டு வட்டில் தொளையில் நீர்புகுந்து அமிழ்ந்தினால் ஒரு நாழிகையாம். (இது முற்காலத்தார் நாழிகை கண்டுபிடித்த வழி) (கங)

### கக. வெண்கலமும் பித்தளையுஞ் செய்தல்

எட்டெடை செம்பில் இரண்டெடை ஈயமிடில்
திட்டமாய் வெண்கலமாம் சேர்ந்துருக்கில் - இட்டமுடன்
ஓரேழு செம்பில் ஒருமூன்று துத்தமிடில்
பாரறியப் பித்தளையாம் பார்.

உரை : எட்டுப்பலஞ் செம்பிலே இரண்டுபலம் ஈயம் இட்டு உருக்கினால் வெண்கலமாம். ஏழரைப்பலம்[1] செம்பிலே மூன்றுபலம் துத்தம் இட்டு உருக்கினால் பித்தளையாம். ()

---

1. பாட்டின்கண் ஏழு பலமும், உரையின்கண் ஏழரைப் பலமும் இருப்பது ஆராய்தற்குரியது.

### கஉ. தொலை அளவு

வையணுதூள் பஞ்சு மயிர்முனை நுண்மணல்
ஐயெள்ளு நெல்லுடனே அவ்விரலாம் - பெய்வளையாய்
எட்டின் வழியெல்லாம் ஏற்றியே அவ்விரலின்
சட்டமதாம் பன்னிரெண்டு சாண்.

உரை : அணுவு எட்டுக்கொண்டது கதிரெழுதுகள்; கதிரெழுதுகள் எட்டுக் கொண்டது பஞ்சிற்றுகள்; பஞ்சிற்றுகள் எட்டுக்கொண்டது மயிர்முனை; மயிர்முனை எட்டுக்கொண்டது நுண்மணல்; நுண்மணல் எட்டுக்கொண்டது சிறுகடுகு; சிறுகடுகு எட்டுக்கொண்டது எள்ளு; எள்ளு எட்டுக்கொண்டது நெல்லு; நெல்லு எட்டுக்கொண்டது

கூய X அ = எஉய, சு X அ = சஅ, ஆக எசுஅ. ஈவு கூசு. ஆகவே கூசு நாளிலே ஏறும் என்பது.

### ௩அ. குதிரைக் கணக்கு

ய அடியோடி அ அடி மீளுங் குதிரைக்கு விலை வராகன் ய. ஆனால், அ அடி ஓடி, எ அடி மீளுங் குதிரைக்கு விலை என்னவென்றால், ய-க்கும் அ-க்கும் மாற ய X அ = அய, இது நிற்க, அ-க்கும் எ-க்கும் மாற, அ X எ = ருசு, இதை விலை வராகன் பத்துடனே பெருக்க, ருய X ய = ரு௱, சு X ய = சுய, ஆக ருசுய, இதை முன்னிறுத்தின அய-க்கீய, அய X எ = ருசுய, ஈவு ஏழு (எ) பொன்னென்பது. (சுகூ)

### ௩கூ. நிலந்தூர்த்தல்

நல்ல நிலத்தை நடுவே குழியாக்க
கல்லிற்றூர்த் தால்மிகுதி காணலாம் - சொல்லால்
இடைநிலத் திற்றூர்க்கின் ஈராது நேரே
கடைநிலத்தில் போதாது காண்.

உரை : தலைநிலம் குழிகொண்டு தூர்த்தால் மண்மிகும்; இடைநிலத்துக்குச் சரியொக்கும்; கடைநிலத்துக்குப் போதாது. (எய)

### ச0. குழி மாறுதல்

அடிக்கடியை மாறிக் குழியறிய வேண்டில்
அடிக்கடியே மாறி அவற்றை - வடுக்கண்ணாய்
மாகாணி யில்தாக்கி ஒன்பதின்மாக் கீந்தக்கால்
காகாணி குன்றாது காண்.

உரை : யஉ அடிக்கு யஉ அடி எத்தனையென்றால்; யஉ-க்கு யஉ-க்கு மாற, யஉ X யஉ = கசச, இதை மாகாணியிற் கழிக்க, ௱ X ப- = சுவ, சய X ப- = உ௯, ச X ப- = வ, ஆக ஒன்பது, ஈவு ஒரு குழி என்பது. (எக)

### சக. பலர்ச்சுளைக் கணக்கு

பலவின் சுளையறிய வேண்டுதிரேல் ஆங்கு
சிறுமுள்ளுக் காம்பரு கெண்ணி - வருவதை
ஆறிற் பெருக்கியே ஐந்தினுக் கீந்திடவே
வேறெண்ண வேண்டாஞ் சுளை.

உரை : ஒரு பலாப்பழத்தை அறுப்பதற்கு முன்னே அதிலுள்ள சுளைகள் இவ்வளவென்று கண்டிபிடிக்கலாமோ எனின் அதற்குச் சொல்லுமாறு; காம்பைச் சுற்றிலும் எண்ணிப் பார்க்க, ௱ முள்ளுக் கண்டது. இதை சு-ஆல் பெருக்க, ௱ X சு = சு௱, இதை ரு-க்கீய, ௱ X ரு = ரு௱, உய X ரு = ௱, ஆக சு௱. ஈவு ௱உய சுளை என்று சொல்வது.

## சஉ. பூசனிவிதைக் கணக்கு

கீற்றெண்ணி முத்தித்துக் கீழாறி னால்மாறி
வேற்றைஞ்சு தன்னில் மிகப்பெருக்கிப் - பார்த்ததிலே
பாதிதள்ளி மூன்றிற் பகிரவிதை யாகும்
பூசனிக்காய் தோறும் புகல்.

உரை : ஒரு பூசனிக்காயை உடைத்துப் பார்ப்பதற்கு முன் அதில் எத்தனை விதை யிருக்கிறதென்று கண்டு பிடிக்கவேண்டுமென்றால்; பூசனிக்காய் ஒன்றுக்குக் கீற்று அ கண்டால், இதனை ௩-ஆல் பெருக்க, அ X ௩ = உச, இதனை ௬-ஆல் பெருக்க, உ௰ X ௬ = ௱உ௰, ச X ௬ = உச, ஆக ௱சச, இதனை ௫-ல் பெருக்க, ௱ X ௫ = ௫௱, ச௰ X ௫ = உ௱, ச X ௫ = உ௰, ஆக எஉ௰. இதிற் பாதி ௩௬௰. இதனை மூன்றாற் பெருக்க ௲அ௰. ஆகவே பூசனிக்காய் க-க்குக் கீற்று அ-க்கு விதை ௲அ௰ என்று சொல்வது. (எஉ)

## ச௩. அடிக்கணக்கு

௰உ அடிகோலால், குழி ௱ கண்டதொரு கோலால் அளக்க, ௬ச குழி கண்டது. அளந்த கோலுக்கு அடி பார்க்கும்படி, ௰உ-க்கும் ௰உ-க்கும் மாற, ௰உ X ௰உ = கசச. இதை நடுலக்கம் ௱-ஆல் பெருக்க, ௱ X ௱ = ௰௲, ௱ X ச௰ = ச௲, ௱ X ச = ச௱, ஆக ௰ச௲ச௱, இதை ௬ச-க்கீய, உ௱ X ௬௰ = ௰உ௲, உ௱ X ச = அ௱, ௬௰ X உ௰ = ௲உ௱, ச X உ௰ = அ௰, ௬௰ X ௫ = ௩௱, ச X ௫ = உ௰, ஆக ௰ச௲ச௱, ஈவு உஉ௫, இதைச் சரியாய்க் குழிமாற, ௰௫-க்கு ௰௫-ம் குழிமாற, உஉ௫ ஆதலால், ௰௫ அடி என்பது.

## சச. படியாள் கணக்கு

௩௬௰ நாள் வேலை செய்தவனுக்கு வராகன் ௩௰ ஊதியமென்றால், ௰அ நாள் வேலை செய்தவனுக்கு ஊதியம் எவ்வளவெனின்; ௩௰-க்கும் ௰அ-க்கு மாற, ௩௰ X ௰ = ௩௱, ௩௰ X அ = உச௰, ஆக ௫ச௰, இதை ௩௬௰-க்கீய, ௩௱ X க = ௩௱, ௬௰ X க = ௬௰, ௩௱ X ௯ = ௱௫௰, ௬௰ X ௯ = ௩௰, ஆக ௫ச௰, ஈவு க௯ ஆதலால், ௰அ நாள் வேலை செய்தவனுக்கு க௯ பொன் என்பது.

## இன்னமும் படியாள் கணக்கு

உ௱ நாள் வேலை செய்தவன் ௰௫ வராகன் பெற்றால், ௫ பொன் கொண்டான் எத்தனை நாள் வேலை செய்வானென்றால்; தலையான நாளையும், கடையான கொண்ட பொன்னையும் பெருக்க, உ௱ X ௫ = ௲, இதை நடுவான பொன் ௰௫-க்கீய, ௰ X ௬௰ = ௬௱, ௫ X ௬௰ = ௩௱, ௰ X ௬ = ௬௰, ௫ X ௬ = ௩௰, ௰ X ௯ = ௫, ௫ X ௯ = உ௯, ஆக ௬௬எ௯ போய் நின்றது உ௯, இந்த உ௯ நாளுக்கு நாழிகை ௱௫௰, இதை ௰௫-க்கீய, ௰ X ௰ = ௱, ௫ X ௰ = ௫௰, ஆக ௱௫௰. ஆதலால் ௫ பொன் கொண்டவன் வேலைசெய்யும் நாள் ௬௬௯-யும், நாழிகை ௰-ம் என்று சொல்வது. (எ௩)

## சரு. குதிரைக் கணக்கு

நாலுலட்ச ணப்புரவி நான்கைம் பதுகழஞ்சால்
ஏலுமெட்டு லட்சணமா ரண்டுக்கு - மேல்விலைதான்
பின்னிரண்டால் தாக்கி நடுவிற் பெருக்கியதை
முன்னிரண்டுக் கீந்து மொழி.

உரை : நான்கு லட்சணக் குதிரை நான்குக்கு, ஐம்பது கழஞ்சென்றால், எட்டு லட்சணக் குதிரை இரண்டுக்கு எத்தனையென்றால் சொல்லுமாறு; ச லட்சணக் குதிரை ச, பின் எட்டு லட்சணக் குதிரை உ என்றறிந்து, அ + உ = ய. இதனை நான்கால் பெருக்க, ச X ய = சய என்று வைத்துக்கொண்டு, அ X உ = யசு, இதனை நடுவான பொன் (ருய) ஐம்பதுடனே பெருக்க, ருய X ய = ருா, ருய X சு = நூா, ஆக அா. இதனை முன்வைத்த சய-க்கீய, சய X உய = அா, ஈவு உா ஆதலால், அ லட்சணக் குதிரை உ-க்கு வராகன் உய என்று சொல்வது.

## சசு. கூத்தாடும் பெண்கள் கணக்கு

ய வயதிலே அ கூத்தாடும் பெண்ணுக்குக் கொடை வராகன் ருய. அ வயதிலே எ கூத்தாடும் பெண்ணுக்குக் கொடை வராகன் எத்தனையென்றால்; ய X அ = அய வைத்துக்கொண்டு, அ X எ = ருசு, இதை நடுவானதொகை ருய-ஆல் பெருக்க, ருய X ருய = உகூருா, ருய X சு = நூா, ஆக உகூஅா, இதனை முன்வைத்த அய-க்கீய, அய X நூய = உகூசா, அய X ரு = சா, ஆக உகூஅா, ஈவு நூரு ஆதலால், அ வயதிலே எ கூத்தாடும் பெண்ணுக்கு வராகன் நூரு என்று சொல்வது.

## சஎ. மண்வெட்டுங் கணக்கு

எள்ளத்தனை யாழம் வெட்டினவனுக்கு நெல் அ(ள) கலமானால் ஓர் ஆள் அழம் வெட்டினவனுக்கு எவ்வளவு நெல் என்றால்; எள்ளு அ கொண்டது நெல்லு, நெல்லு அ கொண்டது விரல், விரல் யஉ கொண்டது சாண், சாண் அ கொண்டது ஆள். அளவு என்று அறிந்து, எள்ளத்தனை யாழம் வெட்டினவனுக்கு நெல்லு அ ள, நெற்கடை யாழம் வெட்டினவனுக்கு நெல்லு சுச ள. விரல் அளவு வெட்டினவனுக்கு நெல்லு ருகஉ ள, சாண் ஆழம் வெட்டினவனுக்கு நெல்லு சுகூாசச ள. மனிதர் மட்டமாவது எண் சாண் உயரம் வெட்டினவனுக்கு நெல்லு சசுகூா ருயஉ ள என்று சொல்வது.

## சஅ. ஏற்றமிறைக்குங் கணக்கு

ஆயிரம் கமுகு இறைப்பவனுக்கு நெல்லு ஹ ஆனால், ஒரு கமுகு இறைப்பவனுக்கு நெல்லு எத்தனையென்றால்; ஹ ஆவது ருஹூ, செவிடு க-க்கு நெல்லு நூசுய, ஹ நெல்லுக்குத் தனிநெல்லு, கூஅா, இதைக் கமுகு கூ-க்கீய, ஈவு கஙப நெல்லென்று சொல்வது.

## சகூ. வெற்றிலைக் கணக்கு

ஒரு செட்டியாருக்கு மூன்று பிள்ளைகள் இருந்தார்கள். செட்டியார் தம் மக்களுடைய வாணிகத் திறமையைப் பார்க்கவேண்டுமென்று எண்ணினார். மூத்தவன் கையில் ருய வெற்றிலையும், நடுவானவன் கையில் ௩ய வெற்றிலையும், இளையவன் கையில் ய வெற்றிலையுங் கொடுத்து, மூத்தவன் விற்ற விலைக்கு விலையும், சரியாகக் காசும் சரியாகக் கொண்டு வாருங்கள் என்று சொல்லி யனுப்பினார். அவர்கள் விற்ற விவரம் வருமாறு:

மூத்தவன் காசு க-க்கு எ விழுக்காடு, எ காசுக்கு சகூ வெற்றிலை விற்றான். ஒரு வெற்றிலை எஞ்சியது. இரண்டாவது பையன் அவ்வாறே ச காசுக்கு உஅ வெற்றிலை விற்றான். இரண்டு வெற்றிலைகள் எஞ்சின. இளையவன் மூத்தவர்கள் விற்றவாறே ஒரு காசுக்கு எ வெற்றிலை விற்றான். மூன்று வெற்றிலைகள் எஞ்சின. அவ்வாறாக மாலைப் பொழுதில் வெற்றிலை கிடைப்பது அருமையாகி மூத்தவன் எஞ்சிய வெற்றிலை ஒன்றையும் மூன்று காசுக்கு விற்றான். நடுவானவன் எஞ்சிய வெற்றிலை ஒன்றையும் மூன்று காசுக்கு விற்றான். நடுவானவன் எஞ்சிய இரண்டு வெற்றிலைகளையும் சா காசுக்கு விற்றான். இளையவன் எஞ்சிய வெற்றிலை மூன்றையும் கூ காசுக்கு விற்றான். மூன்று பேரும் முன் விற்ற காசையுங் கூட்டிப் பார்த்தார்கள். ய காசுகளாயின. தகப்பனாரிடத்திலே கொண்டுபோய்க் கொடுத்தார்கள் என்று சொல்வது.

## ரு0. நெல் விற்பனைக் கணக்கு

பணம் க-க்கு நெல்லு ஒதஒு கொண்டு அ மரக்கால் விழுக்காடு விற்றான். மாலையிலே அ மரக்கால் நெல் கொண்டு ஒத நெல் விற்றான். இதிலே இலாபம் உண்டாகுமா? சொல்லுக என்று கேட்டால், ய மரக்கால் கொண்டு அ மரக்கால் விற்றால் எஞ்சிய நெல்லு ஒு-க்குப் பணம் கால்; பிறகு அ மரக்கால் கொண்டு ய மரக்கால் விற்றால் ஒு நெல்லு நட்டம். இந்த விலைக்கு ஒு நெல்லும் கு பணமும், முன் லாபம் பணம் காலில் கு போய் நீக்கி ஒருமா(ப)ப் பணம் இலாபம் என்று சொல்வது.

## ருக. பால் கணக்கு

ஓர் அரசனுடைய அரண்மனைக்கு உச வாசல்கள் இருந்தன. அந்த அரசனுக்கு ஓர் இடையன் பால்கொண்டு வந்து கொடுத்தான். முதல் வாசலைக் காக்கிறவன் நாழி பால் எடுத்துக்கொண்டு நாழி தண்ணீர் வார்த்தான். இவ்வாறு இருபத்துநான்கு வாசற்காரரும் நாழி நாழி பால் எடுத்துக்கொண்டு, நாழி நாழி தண்ணீரை ஊற்றினார்கள். அதன் பிறகு பாலைக் கொண்டுபோய் அரசன் முன்னே வைத்தான். அரசன் பாலைப் பார்த்துத் தண்ணீராக இருக்கிறது என்று சினங்கொண்டான். இடையனைத் தண்டித்து உச பொன் அபராதம் வாங்கினான். அதன்பின் இடையன் இயம்பியதாவது, "நான் நல்ல பால் கொண்டு வந்தேன். வாசற்காரர்கள் ஒவ்வொருவரும் நாழி நாழி பால் எடுத்துக்கொண்டு அதற்குப் பதில் நாழி நாழி தண்ணீரை ஊற்றிவிட்டார்கள்" என்று சொன்னான். ஆகவே, அபராதத்தை வாசற்

காவற்காரர்கள் கொடுக்க வேண்டும் என்று அரசன் முடிவு செய்தான். அவர்கள் எவ்வாறு பங்குபோட்டுக் கொடுத்தார்களென்றால், வாசல் ௨௪-க்குப் படியடி இலக்கம் ௩௱. அபராதம் மேற்படி ௨௪-க்குப் பணம் ௨௪௰-ம் ஈய, ஈவு ஞப, ஆதலால் முதல் வாசல்காரனுக்குப் பணம் ஞப, இரண்டாம் வாசல் காவல்காரனுக்குப் பணம் கஃஉ, இவ்வாறு வாசலுக்கு வாசல் ஞப பணமென்றறிக, கடைசி ௨௪ வாசலுக்கு ௰௯௬ பணமும் ஆக மேற்படி ௨௪ பொன்னையும் கணக்கிட்டுக் கொள்க.

## **௫௨. முத்துக் கணக்கு**

ஒரு செட்டியார் ஓர் அரசனுக்கு முத்துத் தாவடங் கொண்டுவந்து கொடுத்தார். "இதன் விலை என்ன? இதில் எத்தனை முத்துக்கள் இருக்கின்றன?" என்று அரசன் கேட்டான். அதற்குச் செட்டியார், "இந்தத் தாவடத்திலே ௪௯ முத்துக்கள் இருக்கின்றன. இதில் முதலாவது முத்துப் பணம் ௧. இரண்டாவது முத்துப் பணம் ௨. மூன்றாவது முத்துப் பணம் ௩. நான்காவது முத்துப் பணம் ௪. இவ்வாறே முத்துக்கு முத்துப் பணம் கூடுதலாகும். ௪௯-ஆவது முத்தின் விலை ௪௯ பணம்" என்று செட்டியார் மறுமொழி கூறினார்.

அரசன் செட்டியாரைப் பார்த்து, "நல்லது, எனக்கு மனைவிமார் ஏழுபேர் இருக்கிறார்கள். அவர்கள் ஏழு பேருக்கும் இந்த முத்துக்களைப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும். பங்கிடுவதில் முத்துஞ் சரியாக இருக்க வேண்டும். விலையுஞ் சரியாக இருக்க வேண்டும். அவ்வாறு பங்கிட்டுக் கொடுத்துவிட்டு உரிய பணத்தை வாங்கிக்கொண்டு போ" என்று கூறினான்.

செட்டியார் முத்துக்களை எவ்வாறு பகிர்ந்து கொடுத்தார் எனின்; முத்து ௪௯-க்குப் படியடி இலக்கம் ௪௯-க்குப் பாதி ௨௪ஃ. இதனோடு அரை (ஃ)யைக் கூட்ட ௨௫. இந்த ௨௫-க்கும் ௪௯-க்கு மாற, ௲௨௨௫ பணம். இதை ஏழு மனைவியருக்கும் பங்கிட ௱ X ௭ = ௭௱, ௭௰ X ௭ = ௪௯௰, ௫ X ௭ = ௩௫, ஆக ௲௨௨௫, ஈவு, ௱௭௫, பங்கு ௧-க்குப் பணம் ௱௭௫, இதற்கு முத்துப் பிரிக்கும் விவரம்: ௧, ௯, ௰௭, ௨௫, ௩௩, ௪௧, ௪௯ ஆக முத்து ௭-க்குப் பணம் ௱௭௫: ௰, ௰௮, ௨௬, ௩௪, ௪௨, ௪௩, ௨ ஆக முத்து ஏழுக்குப் பணம் ௱௭௫; ௰௯, ௨௭, ௩௫, ௩௬, ௪௪, ௩, ௰௧ ஆக முத்து ௭-க்குப் பணம் ௱௭௫; ௩௯, ௪௭, ௯, ௰௪, ௰௫, ௨௩, ௩௧ ஆக முத்து ௭-க்குப் பணம் ௱௭௫; ௩௰, ௩௮, ௪௬, ௫, ௰௩, ௨௧, ௨௨ ஆக, முத்து ௭-க்குப் பணம் ௱௭௫: ௪௮, ௭, ௮, ௰௬, ௨௪, ௩௨, ௪௰ ஆக முத்து ௭-க்குப் பணம் ௱௭௫, இவ்வாறு பார்த்துக்கொள்க.

## **௫௩. களவுக் கணக்கு**

ஒரு பட்டணத்தில் வாணிகஞ் செய்துகொண்டிருந்த ஒரு செட்டியின் வீட்டில் கன்னம் வைத்துக் கள்ளர்கள் சிலர் உள்ளே நுழைந்தார்கள். தேடிப் பார்க்கையில், ஒரு கள்ளனுடைய கையிலே முடிப்பு ஒன்று அகப்பட்டது. அச்சமயத்தில் செட்டியார் விழித்துக்கொண்டார். கள்ளர்கள் எல்லோரும் திக்குக்கு ஒருவராக ஓட்டம் பிடித்தார்கள். முடிப்பு எடுத்த கள்ளன் அவ்வூருக்கு அண்மையில் இருந்த கோவிலுக்குப் போய் மறைவாக ஓரிடத்தில் உட்கார்ந்து முடிச்சை அவிழ்த்துப்

பார்த்தான். முத்துக்களாக இருக்கக் கண்டு அவைகளை எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு கள்ளன் அவ்விடத்திற்கு வந்து, ''முத்துக்களில் எனக்கும் பங்கு கொடு'' என்று கேட்டான். முத்தெடுத்த கள்ளன் ''நல்லது'' என்று சொல்லி அம் முத்தைப் பங்கிட்டபோது ஒரு முத்து மீந்தது. அம் முத்து ''எனக்கு உனக்கு'' என்று இரண்டுபேரும் வழக்கிட்டுக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது மற்றொரு கள்ளன் அவ்விடத்திற்கு வந்து ''எனக்கும் பங்குண்டு'' என்று சொன்னான். நல்லது என்று அதனை மூன்றாகப் பங்கிடுகையில் ஒரு முத்து மீந்தது. இவ்வாறு ஆறு கள்ளர்கள் வழக்கிட்டுக்கொண்டிருக்கையில் ஒரு முத்து மீந்தது. மேலும் மற்றொரு கள்ளன் அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தான். பிறகு ஏழாங் கள்ளனுக்கும் பங்கிட முத்துக்கள் சரியாக இருந்தன. இவ்வாறாயின் அந்த முடிப்பில் இருக்க முத்துக்கள் எத்தனை?

மொத்தம் **ங**0க, இதை இரண்டாகப் பிரிக்க ாருய, எஞ்சியது க மூன்றாகப் பிரிக்கப் பங்குக்கு ா, எஞ்சியது க. நான்காகப் பிரிக்கப் பங்குக்கு எரு, எஞ்சியது க. ஐந்தாகப் பிரிக்கப் பங்குக்கு கூய, எஞ்சியது க. ஏழாகப் பிரிக்கப் பங்குக்கு **சங**. எ X **ச**ய = உஅய, எ X **ங** = உக, ஆக **ங**ாக. இப்பொழுது முத்து எஞ்சாமல் சரியாகப் போய்விட்டது.

## ருச. இரத்தின வாணிகக் கணக்கு

ஒரு பட்டணத்தில் ஒரு செட்டியார் இருந்தார். அவருக்கு நான்கு பிள்ளைகள் இருந்தார்கள். அவர்கள் தங்கள் தகப்பனாருக்குத் தெரியாமல் வாணிகஞ் செய்து பொருள் தேட வேண்டும் என்று முடிவு செய்தார்கள். செட்டியாருக்குத் தெரியாமல் சில திரவியம் எடுத்துக்கொண்டு மலாக்கா நாட்டிற்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

மூத்தவன் **முத்து** வாணிகஞ் செய்தான். அவனுக்கு இளையவன் **மாணிக்க** வாணிகஞ் செய்தான். அவனுக்கு இளையவன் **நீல** வாணிகஞ் செய்தான். அவனுக்கு இளையவன் **வச்சிர** வாணிகஞ் செய்தான். நான்கு பேருந்திரும்பித் தந்தையாரிடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். ஆனால் தாங்கள் தேடிய பொருளைப் பங்கிட்டுக் கொள்ளாமல் ஒருவருக்கொருவர் சச்சரவிட்டுக் கொண்டிருந்தார்கள். செட்டியார் தம்முடைய மக்களைப் பார்த்து, ''நீங்கள் தேடிய பொருளை ஒழுங்காகப் பங்கு பிரித்துக்கொள்ளாமல் இவ்வாறு மாறுபடுவது நல்லதன்று,'' என்று கூறினார். அவர்கள் தங்களுடைய தகப்பனாரைப் பார்த்து, ''இப்பொழுது உங்களிடம் வந்திருக்கிறோமே நீங்கள் பார்த்து எவ்வாறு சொல்லுகிறீர்களோ அவ்வாறே செய்கிறோம்,'' என்று சொன்னார்கள். நீங்கள் கொண்டு வந்திருப்பவை இன்ன பொருளென்றும், இவ்வளவென்றுங் கூறினால் நான் பங்கிட்டுக் கொடுக்கிறேன்'' என்றார். எல்லோரும் அதற்கு இசைந்தார்கள்.

மூத்தவன் தான் முத்துக்கள் கொண்டு வந்திருப்பதாகக் கூறினான். அவனுக்கிளையவன் மாணிக்கங்கள் கொண்டு வந்திருப்பதாகச் சொன்னான். அவனுக்கிளையவன் நீலங்கள் கொண்டு வந்திருப்பதாகச் சொன்னான். அவனுக்கிளையவன் வச்சிரங்கள் கொண்டு வந்திருப்பதாகச் சொன்னான். செட்டியார் பொருள்களின் அளவை அறிய விரும்பினார். மூத்தவன் ''நான் நூறு (ா) முத்துக்கள்

கொண்டு வந்திருக்கிறேன். இதன் விலை முத்து க-க்குப் பணம் ரு'' என்று சொன்னான். அவனுக்கிளையவன் நான் எட்டு (அ) மாணிக்கங்கள் கொண்டு வந்திருக்கிறேன். இதன் விலை மாணிக்கம் க-க்குப் பணம் ௱௨ய என்று சொன்னான். அவனுக்கிளையவன், ''நான் பத்து (ய) நீலங்கள் கொண்டு வந்திருக்கிறேன். இதன் விலை நீலம் க-க்குப் பணம் அய,'' என்று சொன்னான். அவனுக்கிளையவன் நான் ஐந்து (ரு) வச்சிரங்கள் கொண்டு வந்திருக்கிறேன். இதன் விலை வச்சிரம் ஒன்றுக்குப் பணம் சஅய என்று சொன்னான். இந்தப் பொருள்களை அவர்கள் எவ்வாறு பங்கிட்டுக் கொண்டார்களென்றால்;

### முதற் பையன்

மூத்தவன் கொண்டுவந்த ௱ முத்துக்களிலே, இளையவர்கள் மூன்று பேருக்கும் ௩ முத்துக்களைக் கொடுத்தான். எஞ்சிய முத்துக்கள் கூஎ-ல் முத்து க-க்குப் பணம் ரு வீதம் பணம் சஅரு

| | | | |
|---|---|---|---|
| அவர்கள் இவனுக்குக் கொடுத்த | மாணிக்கம் | க-க்கு | க௨ய |
| ,, ,, ,, | நீலம் | க-க்கு | அய |
| ,, ,, ,, | வச்சிரம் | க-க்கு | சஅய |
| | | ஆகப் பணம் | தூ௱கூரு |

### இரண்டாவது பையன்

இரண்டாவது பையன் கொண்டுவந்த மாணிக்கம் அ-ல் மற்றை மூவருக்குங் கொடுத்ததுபோக எஞ்சி நின்ற மாணிக்கம் ரு-க்கும் மாணிக்கம் க-க்குப் பணம் ௱௨ய வீதம் பணம் கூ௱

| | | | |
|---|---|---|---|
| அவர்கள் இவனுக்குக் கொடுத்த | முத்து | க-க்கு | ரு |
| ,, ,, ,, | நீலம் | க-க்கு | அய |
| ,, ,, ,, | வச்சிரம் | க-க்கு | சஅய |
| | | ஆகப் பணம் | தூ௱கூரு |

### மூன்றாவது பையன்

மூன்றாவது பையன் கொண்டுவந்த நீலம் ய-ல் மற்றை மூவருக்குங் கொடுத்ததுபோக எஞ்சி நின்ற நீலம் எ-க்குப் பணம் அய வீதம் பணம் ருகூய

| | | | |
|---|---|---|---|
| அவர்கள் இவனுக்குக் கொடுத்த | முத்து | க-க்கு | ரு |
| ,, ,, ,, | மாணிக்கம் | க-க்கு | க௨ய |
| ,, ,, ,, | வச்சிரம் | க-க்கு | சஅய |
| | | ஆகப் பணம் | தூ௱கூரு |

## நான்காவது பையன்

நான்காவது பையன் கொண்டுவந்த வச்சிரம் ரு-ல் மற்றை மூவருக்குங் கொடுத்ததுபோக எஞ்சி நின்ற வச்சிரம் உ-க்குப் பணம் சஅய வீதம் பணம் கூசூய

| | | | |
|---|---|---|---|
| அவர்கள் இவனுக்குக் கொடுத்த | முத்து | க-க்கு | ரு |
| ,, ,, ,, | மாணிக்கம் | க-க்கு | ாஉய |
| ,, ,, ,, | நீலம் | க-க்கு | அய |
| | | ஆகப் பணம் | தூாசூரு |

இவ்வாறாக நான்கு பேரும் சரிசமமாகப் பங்கிட்டுக் கொண்டார்கள். மொத்தப் பணம் சதூசூகூய.

## ருரு. வெள்ளரிக்காய்க் கணக்கு

ஓர் ஊரிலே ஒரு தலையாரி இருந்தான். அவனுக்கு மனைவியர் மூவர் இருந்தனர். ஒருநாள் அத்தலையாரி வெள்ளரிக்காய்களைக் களவுசெய்து வந்து வீட்டிலே ஓரிடத்தில் வைத்துவிட்டு அவன் மீண்டும் வெளியே போய் விட்டான். பிறகு தலையாரியினுடைய முதல் மனைவி வந்து வெள்ளரிக்காயைப் பார்த்தாள். அவளுக்கு ஒரு குழந்தையுண்டு. வெள்ளரிக்காயைப் பார்த்த அவள் ஒரு காயை எடுத்துத் தன்னுடைய குழந்தை கையில் கொடுத்துவிட்டு எஞ்சியவைகளை மூன்றாகப் பங்கிட்டாள். இரண்டு பங்கை வைத்து ஒரு பங்கைத் தான் எடுத்துக்கொண்டு சென்றாள். பிறகு தலையாரியினுடைய இரண்டாவது மனைவி வந்தாள். அவளுக்கும் ஒரு குழந்தை உண்டு. வெள்ளரிக்காயைப் பார்த்த அவள், மூத்தவள் பங்கிட்டு எடுத்துக்கொண்டு போன செய்தியை அறியாமல், தான் ஒரு காயை எடுத்துத் தன் குழந்தையிடம் கொடுத்துவிட்டு எஞ்சியதை மூன்றாக பங்கிட்டுத் தான் ஒரு பங்கை எடுத்துக்கொண்டு சென்றாள். பிறகு தலையாரியினுடைய மூன்றாவது மனைவி வந்தாள். அவளுக்கும் ஒரு குழந்தை உண்டு. முன்னவர் இருவரும் பங்கிட்ட செய்தியை அவள் அறியாமல், இருந்த காய்களைத் தான் பங்கிடத் தொடங்கினாள். ஒரு காயை எடுத்துத் தன் குழந்தையிடம் கொடுத்துவிட்டு, எஞ்சியவைகளை மூன்றாகப் பங்கிட்டுத் தான் ஒரு பங்கை எடுத்துக்கொண்டு சென்றாள். காலையில் தலையாரி வந்தான். அவன் அங்கு எஞ்சியிருந்த காய்களைச் சரியாக மூன்று பேருக்கும் பங்கிட்டுக் கொடுத்தான். அவன் களவிலே கொண்டுவந்த காய்கள் எத்தனை? தலையாரி களவிற் கொண்டுவந்த காய்கள் இருபத்தைந்து (உரு). முதற்கண் முதல் மனைவி எடுத்துக்கொண்டது வெள்ளரிக்காய் அ என்றும், உ-ஆம் மனைவி எடுத்துக்கொண்டது ரு என்றும், மூன்றாம் மனைவி எடுத்துக்கொண்டது ௩ என்றும், கடைசியில் மூவரும் தனித்தனியே தலையாரியிடமிருந்து பெற்றது உ என்றும் கண்டுகொள்க.

## ருசூ. சேவகன் ஊதியக் கணக்கு

ஓர் அரசன் இடத்தில் ஒரு சேவகன் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வராகனுக்கு ஊழியம் புரிவான். ஆண்டு ஒன்றுக்கு ௩சூய நாளைக்கும் ௩சூய

வராகனெடையில், ய மோதிரஞ் செய்து விரலில் இட்டுக்கொண்டு அந்தச் சேவகன் எத்தனை நாள் சேவித்து, நடுவே வேலையை விட்டுப் போகிறான் என்றால், வேலைசெய்த நாளைக்கு உள்ள வராகன் இந்தப் பத்து மோதிரத்திலே கொடுக்க வேண்டுமென்று இந்தப் பத்து மோதிரஞ் செய்த விவரம் :

| | | |
|---|---|---|
| 1 | ஒரு வராகனெடை மோதிரம் (க) | க |
| 2 | இரண்டு வராகனெடை மோதிரம் (உ) | க |
| 4 | நான்கு வராகனெடை மோதிரம் (ச) | க |
| 8 | எட்டு வராகனெடை மோதிரம் (அ) | க |
| 16 | பதினாறு வராகனெடை மோதிரம் (யசா) | க |
| 32 | முப்பத்திரண்டு வராகனெடை மோதிரம் (ஙஉ) | க |
| 64 | அறுபத்து நான்கு வராகனெடை மோதிரம் (சாச) | க |
| 128 | நூற்றிருபத்தெட்டு வராகனெடை மோதிரம் (ாஉஅ) | க |
| 90 | தொண்ணூறு வராகனெடை மோதிரம் (கூய) | க |
| 15 | பதினைந்து வராகனெடை மோதிரம் (யரு) | க |

ஆக மோதிரம் ய-க்கு வராகனெடை ஙசாய என்று கண்டுகொள்க.

## ருஎ. தேவதாசியின் கட்டளைக் கணக்கு

ஓர் ஊரிலே ஒரு தேவதாசிக்கு ஒரு வராகன் விகிதமாய், அத்தேவதாசிக்குப் பட்டணமாளுகிற அரசனுடைய ஊழியக்காரன் உடன்படிக்கை செய்துகொண்டான். எவ்வாறெனில், ஒரு திங்களுக்கு முப்பது வராகன் கட்டளை யாகையால், என் கையில் ஐந்து மோதிரங்கள் இருக்கின்றன. அவை முப்பது வராகனெடையில் செய்யப்பெற்றவை. திங்கள் ஒன்றுக்கு நாள் முப்பதுக்கு நடந்துகொண்டால் இந்த ஐந்து மோதிரங்களையும் தருகிறேன். அல்லாமல் அரசன் ஒருவேளை வேறிடங்கட்குப் பயணம் போகச் சொன்னால், நடந்துகொண்ட நாளைக்கு, ஐந்து மோதிரங்களிலும் உண்டான வராகன் கணக்குப் பார்த்துக்கொடுத்துவிட்டுப் போகிறேன். அந்த ஐந்து மோதிரங்களும் எத்தனை வராகனெடை என்றால், க வராகனெடையில் க, உ வராகனெடையில் க, ச வராகனெடையில் க, அ வராகனெடையில் க, யரு வராகனெடையில் க, ஆக முப்பது (ஙய) வராகனெடை.

## ருஅ. படியாள் கணக்கு

ஒரு மனிதன் ஙசாய நாள் வேலை செய்தால் பணம் சாஎ௰ ஆக, எ௰ நாழிகை வேலை செய்தவனுக்கு எத்தனை பணம் ஊதியம் என்றால்;

ஆண்டு க-க்கு, நாள் ஙசாய-க்கும் பணம் சாஎ௰ ஈய, ஙா X ஙிசூ = ருசாவ, சாய X ஙிசூ = யகவ, ஆக சாஉ௰, ஈவு ஙீ-ம். நாள் க-க்குச் சாமம் எட்டாக, சாமம் க-க்கு நாழிகை எ௰-க்கு நாள் (ஹு) அரைக்காலுக்கும் (ஙீ) மூன்று வீசத்துக்கும் மாற, ஙிசூ X ஹு = -ஙிஹதகீ௰ பணம் என்று கண்டுகொள்க.

## ருகூ. எண்ணெய்க் கணக்கு

ஓர் ஊரிலே இரண்டு வாணியர்கள் இருந்தார்கள். அவர்கள் தங்கள் ஊருக்கு அடுத்த சிற்றூரில் பணம் க-க்கு இரண்டு மரக்கால் எண்ணெய் விற்கிறது என்று கேள்விப்பட்டார்கள். இரண்டு பேருக்குமாகப் பத்துப் பணத்திற்கு எண்ணெய் வாங்கிக்கொண்டு வருவோம் என்று முடிவு செய்தார்கள். ய மரக்கால் குடம் க, எ மரக்கால் குடம் க, ௩ மரக்கால் குடம் க தங்களோடு எடுத்துக்கொண்டு சென்றார்கள். எண்ணெய் விற்கிற ஊருக்குப் போய் உசாவியபோது, பணம் க-க்கு ஒரு மரக்கால் எண்ணெய் என்று அறிந்தார்கள். அந்த விலைப்படியே, தாங்கள் கொண்டுபோன பணம் ய-க்கும் பத்து மரக்கால் குடம் நிறைய எண்ணெயை வாங்கிக்கொண்டு திரும்பினார்கள். வரும் வழியில் இருவரும் மாறுபட்டுச் சச்சரவிட்டார்கள். இருவரில் ஒருவன் தன்னுடைய பங்கைப் பிரித்துத் தரச் சொன்னான். மற்றொருவன், "மரக்காலோ படியோ இல்லாமல் எவ்வாறு ஆளுக்கு ஐந்து மரக்கால் எண்ணெயாகப் பிரிக்கிறது?" என்றான். பிறகு பின்வருமாறு பங்கிட்டுக் கொண்டார்கள்.

ய மரக்கால் குடத்தில் இருந்த எண்ணெயை ௩ மரக்கால் குடத்தால் மூன்று முறை அளந்து எ மரக்கால் குடத்தில் ஊற்ற, அக்குடம் நிறைந்து ௩ மரக்கால் குடத்தில் இரண்டு மரக்கால் எஞ்சி நின்றது. முன் ய மரக்கால் குடத்தில் இருந்த எண்ணெய் மரக்கால் ஒன்றோடு எ மரக்கால் குடத்தில் நிறைந்திருந்த எண்ணெயை ஊற்ற ஆக எட்டு மரக்கால். ௩ மரக்கால் குடத்தில் மீந்திருந்த எண்ணெய் மரக்கால் இரண்டை எ மரக்கால் குடத்தில் ஊற்றிக்கொண்டு, முன் ய மரக்கால் குடத்தில் இருந்த அ மரக்கால் எண்ணெயில், ௩ மரக்கால் குடம் நிறைய அளந்துகொண்டு அதனை முன் எ மரக்கால் குடத்திலுள்ள உ மரக்கால் எண்ணெயோடு ஊற்ற, எ மரக்கால் குடத்தில் இருப்பது ரு மரக்கால் ஆனதாலும், ய மரக்கால் குடத்தில் ௩ மரக்கால் குடத்தில் அளந்துகொண்ட பின்பு ய மரக்கால் குடத்தில் இருப்பது ரு மரக்கால் ஆனதாலும், ஒவ்வொருவருக்கும் ரு மரக்காலாகச் சரியாகப் போய்விட்டது.

## கூ0. மிளகுக் கணக்கு

ஓர் ஊரில் பன்னிரண்டு கடைகள் இருந்தன. அப்பன்னிரண்டு கடைக்காரர்கள் பேரிலும் அவ்வூர்ப் பெரிய தனக்காரன் கலமிளகுக்கு வரிச்சீட்டு அனுப்பினான். இந்தக் கடைகளில் பெரிய கடைகளும் சிறிய கடைகளும் இருந்தனவாகையால் வரிச்சீட்டு வாங்க வந்தவர்கள் கடைகளுடைய தரமறிந்து, கலமிளகு சேரும்படியாகப் பன்னிரண்டு கடைகளுக்கும் அளவு வகுக்கத் தொடங்கினார்கள்.

முதற் கடைக்கு முக்காலே மூணுவீசஞ் செவிடு; இரண்டாவது கடைக்கு ஒன்றே முக்காலே அரைக்காற் செவிடு, மூன்றாவது கடைக்கு ௩த செவிடு, நான்காவது கடைக்கு எஉ செவிடு; ஐந்தாவது கடைக்கு உழக்காக்கு, ஆறாவது கடைக்கு ஈத (மூன்றுழக்கு), ஏழாவது கடைக்கு நாழியுரி, எட்டாவது கடைக்கு ௩ வ (படி), ஒன்பதாவது கடைக்கு கூ வ. பத்தாவது கடைக்கு க ங, ச வ. பதினோராவது கடைக்கு முக்குறுணி; பன்னிரண்டாவது கடைக்கு தூணிப்பதக்கு (6 குறுணி) ஆகக் கடை பன்னிரண்டுக்கும் கல (12 குறுணி) மிளகு சரியாகிறதென்று முடிவு செய்தார்கள்.

குறிப்பு : ஆனால் இந்தக் கணக்கின்படி கூட்டிச் சரி பார்க்கிறபோது மூன்று வீசம் ஆழாக்கு மிளகு ஒரு கலத்துக்குக் குறைவாகக் காணப்படுகிறது.

## சூக. பலகாரந்தின்ற நாட்கணக்கு

ஒரு பட்டணத்தில் இருந்த ஒரு செட்டியார் வீட்டிற்கு அவருடைய மருமகப் பிள்ளை விருந்தாளியாக வந்து சேர்ந்தார். அவருக்கு நாள்தோறும் பலகாரஞ் செய்ய முடியாமல், ஒரே நாளில் தானே, முப்பது சாண் நீளத்தில், முப்பது சாண் உயரத்தில், முப்பது சாண் அகலத்தில் ஒரு பலகாரஞ் செய்து, அதை நாளும் ஒரு சாண் நீளம் ஒரு சாண் அகலம், ஒரு சாண் உயரம் அரிந்து விருந்திட்டார். அதை எத்தனை நாளைக்கு விருந்திட்டார் என்றால்;

பலகாரத்தினுடைய அகலத்தையும் நீளத்தையும் மாற, ௩௰ X ௩௰ = கூா, இதை உயரத்துடனே மாற, கூா X ௩௰, உளதூ, ஆக நாள் உளதூ. ஆண்டு க-க்கு நாள் ௩சூ௰-க்கீய ௩ா X எ௰ = உகதூ, சூ௰ X எ௰ = சதூஉா ஆக உருதூவா போக நீக்கி தூஅா, ௩ா X ரு = தூருா, சூ௰ X ரு = ௩ா, ஆக நாள் உளதூ-க்கீவு எரு, ஆதலால், எரு ஆண்டுகள் விருந்திட்டார்கள் என்று அறிக.

## சூஉ. யானைகள் வாயிற்படியில் பிரியும் விவரம்

பத்து மதிலுடையான் பார்வேந்தன் வாசலுக்கு
வைத்த மதிலடைவே வாசலுக்கு - அத்திநீர்
உண்ணப்போம் போதும் வரும்போதுந் தான் சரியாய்
எண்ணுங்கோள் ஏழாண் டிருந்து.

உரை : மதிலாபுரி என்னும் ஒரு பட்டணத்தில் இருந்த கோட்டைக்குப் பத்து மதில்கள் இருந்தன. முதல் மதிலுக்கு வாயிற்படி க. இரணட்டாவது மதிலுக்கு வாயிற்படி உ. மூன்றாவது மதிலுக்கு வாயிற்படி ௩. நான்காவது மதிலுக்கு வாயிற்படி ச. ஐந்தாவது மதிலுக்கு வாயிற்படி ரு. ஆறாவது மதிலுக்கு வாயிற்படி சூ. ஏழாவது மதிலுக்கு வாயிற்படி எ. எட்டாவது மதிலுக்கு வாயிற்படி அ. ஒன்பதாவது மதிலுக்கு வாயிற்படி கூ. பத்தாவது மதிலுக்கு வாயிற்படி ௰. ஆக வாயிற்படி பத்திலுமிருந்து யானைகள் தண்ணீர் குடிக்கப் புறப்படுகிறபோது, முன் சொல்லியிருக்கிற கோட்டை முதல் வாயிலிலே எல்லாம் ஒன்றாகப் புறப்பட்டு, மதிலின் இரண்டாவது வாயிலிலே இரண்டாகப் பிரிந்து, மதிலின் மூன்றாவது வாயிலிலே மூன்றாகப் பிரிந்து, மதிலின் நான்காவது வாயிலிலே நான்காகப் பிரிந்து, மதிலின் ஐந்தாவது வாயிலிலே ஐந்தாகப் பிரிந்து, மதிலின் ஆறாவது வாயிலிலே ஆறாகப் பிரிந்து, மதிலின் ஏழாவது வாயிலிலே ஏழாகப் பிரிந்து, மதிலின் எட்டாவது வாயிலிலே எட்டாகப் பிரிந்து, மதிலின் ஒன்பதாவது வாயிலிலே ஒன்பதாகப் பிரிந்து, மதிலின் பத்தாவது வாயிலிலே பத்தாகப் பிரிந்துபோய் ஒரு தடாகத்தில் தண்ணீர் குடித்துக் கோட்டைக்குத் திரும்பும்போது முன்சொல்லியபடியே வந்து புகுந்தன. இந்த யானைகளினுடைய மொத்தமும் அந்தந்த வாயிற்படிகளுக்குப் பிரிந்த தொகைகளினுடைய விவரமும் எப்படியென்றால்;

ஏழாண்டென்றதனால், ஏழாண்டிற்கு நாள் ௨௲௫௨௰ நாளையே மொத்தம் யானைகள் என்றறிந்து, இரண்டாவது வாயிற்படியில் பிரிந்தபோது ௲௨௬௰, மூன்றாவது வாயிற்படியில் பிரிந்தபோது ௮௪௰, நான்காவது வாயிற்படியில் பிரிந்தபோது ௬௩௰, ஐந்தாவது வாயிற்படியில் பிரிந்தபோது ௫௱௪, ஆறாவது வாயிற்படியில் பிரிந்தபோது ௪௨௰, ஏழாவது வாயிற்படியில் பிரிந்தபோது ௩௬௰, எட்டாவது வாயிற்படியில் பிரிந்தபோது ௩௧௫, ஒன்பதாவது வாயிற்படியில் பிரிந்தபோது ௨௮௰, பத்தாவது வாயிற்படியில் பிரிந்தபோது ௨௫௨. ஆகையால் மொத்த யானைகள் ௨௲௫௨௰ என்க.

## ௬௩. யானைகள் தூணிற் கட்டுண்ட கணக்கு

புனமூன்றில் மேய்ந்து நெறியைந்திற் சென்று
இனமான ஏழ்குளநீர் உண்டு - கனமான
காவொன் பதுதன்னில் கட்டுண்டு நின்றவே
கோமன்னர் கூட்டக் களிறு.

உரை : புலத்தில் ஒற்றைப் படையாக மேய்ந்து, வழியில் ஒற்றைப் படையாகப் பிரிந்து, ஏழு குளத்தில் ஒற்றைப் படையாகத் தண்ணீர் அருந்தி ஒன்பது கம்பத்தில் ஒற்றைப்படக் கட்டுண்ட யானைகள் எத்தனையென்று கேட்டால், சொல்லும் விவரம்: ௩-க்கும் ௫-க்கும் மாற, ௩ X ௫ = ௰௫. இதை ௭-க்கும் மாற, ௰ X ௭ = ௭௰, ௫ X ௭ = ௩௫, ஆக ௱௫. இந்தத் தொகையை ஒன்பதால் பெருக்க, ௱ X ௯ = ௬௱, ௫ X ௯ = ௪௫ யானைகள் என்று அறிந்துகொள்க.

## ௬௪. யானைமுகக் கடவுளை மலர்களால் பூசித்த கணக்கு

சிறப்புப் பொருந்திய ஒரு பட்டணத்தில் மூன்று பிள்ளையார் கோயில்கள் இருந்தன. ஒரு குருக்கள் அந்த மூன்று கோவில்களிலுமிருந்த பிள்ளையாரைப் பூசை செய்து கொண்டிருந்தார். அவர் ஒருநாள் பூசையின்பொருட்டு ஒரு தோட்டத்திலே மலர் எடுத்துக்கொண்டு சென்றார். திருமஞ்சனக் குடத்தில் இருந்த தண்ணீரைத் தாம் பறித்துவந்த மலர்களின்மேல் தெளித்தார். அம்மலர்கள் இரட்டித்தன. முதல் பிள்ளையாரைச் சில மலர்களைக் கொண்டு பூசை செய்தார். எஞ்சிய மலர்களை எடுத்துக்கொண்டு இரண்டாவது பிள்ளையார் கோவிலுக்குச் சென்றார். அங்கும் அம்மலர்கள் மீது தண்ணீரைத் தெளிக்க, அவை இரட்டித்தன. அம் மலர்களிற் சிலவற்றை எடுத்து இரண்டாவது பிள்ளையாரைப் பூசித்தார். அங்கு எஞ்சிய மலர்களை எடுத்துக்கொண்டு மூன்றாவது பிள்ளையார் கோவிலுக்குச் சென்றார். அங்கும் மலர்களின்மீது தண்ணீரைத் தெளித்தார். மலர்கள் இரட்டித்தன. ஒரு மலர்கூட எஞ்சாமல் பிள்ளையாரைப் பூசை செய்துவிட்டு வெறுங் குடலையோடு சென்றார்.

இவ்வாறாயின் தோட்டத்திலிருந்து அந்தக் குருக்கள் எடுத்துக்கொண்டுவந்த மலர்கள் எத்தனை? (௭) ஏழு. எவ்வாறென்றால், இவைகளை இரட்டிக்கப் (௰௪) பதினான்கு. இவைகளில் முதற் பிள்ளையாரைப் பூசித்த மலர் (௮) எட்டுப்போக, எஞ்சியவை ஆறு. இவைகளை இரட்டிக்கப் (௰௨) பன்னிரண்டாயின. இரண்டாவது

பிள்ளையாரைப் பூசித்த மலர்கள் (அ). எட்டுப்போக எஞ்சியவை (ச) நான்கு. இவைகளை இரட்டிக்க (அ) எட்டாகையால் குருக்கள் மூன்று பிள்ளையார்களையும் ஒரே அளவான மலர்களால் பூசித்துவிட்டுச் சென்றார் என்க.

## இதுவும் அது

ஒரு நகரத்தில் மூன்று பிள்ளையார் பிள்ளையார் கோயில்கள் இருந்தன. அக்கோயிலில் இருக்கிற பிள்ளையார்களை ஒரு குருக்கள் பூசிக்கிறது வழக்கம். ஒரு தோட்டத்தில் மலர்கள் எடுத்துக்கொண்டு வந்து அவைகளின் மேல் தண்ணீரைத் தெளித்தார். அவைகள் ஒன்று பத்தாயின. அம்மலர்களினால் முதற் பிள்ளையாரைப் பூசை செய்துவிட்டு எஞ்சிய மலர்களை எடுத்துக்கொண்டு, இரண்டாவது பிள்ளையார் கோயிலுக்குச் சென்றார். அங்கு அவைகளின்மேல் தண்ணீரைத் தெளித்தார். அவைகள் ஒன்று நூறாயின. அங்குள்ள பிள்ளையாரைப் பூசைசெய்துவிட்டு எஞ்சிய மலர்களை எடுத்துக்கொண்டு மூன்றாவது பிள்ளையார் கோயிலுக்குச் சென்றார். அங்கு அவைகளின்மீது தண்ணீர் தெளிக்க, அம் மலர்கள் ஒன்று ஆயிரமாயின. ஆகவே மூன்றாவது பிள்ளையாருக்குச் சரியாகச் சாற்றிவிட்டார்.

இவ்வாறாக அக் குருக்கள் முதலில் எடுத்துக்கொண்டு வந்த மலர்கள் எத்தனையென்றால்; ரககூக; இம்மலர்கள் ஒன்று பத்தானபோது, பத்து லட்சத்துப் பதினாயிரத்துப் பத்து, யொகூ (பத்து லட்சம்) மலர்கள் முதற் பிள்ளையாருக்குச் சுற்றி, எஞ்சியவை யகூய. இவைகள் ஒன்று நூறானதால், பத்து லட்சத்து ஓராயிரம் மலர்கள் இரட்டித்ததில், இரண்டாவது பிள்ளையாருக்குப் பத்து லட்சம் மலர்கள் சாற்றி எஞ்சி நின்றவை கூ (ஆயிரம்), இஃது ஆயிரமானபோது பத்து லட்சமாதலால், மூன்றாவது பிள்ளையாருக்கும் யொகூ (பத்து லட்சம்) மலர்கள் சரியாகச் சாற்றிவிட்டார் என்க.

## சூ ரு. வண்டுகள் கணக்கு

நீர்வளம் பொருந்திய ஒரு தடாகத்திலே தாமரைப் பூக்கள் மலர்ந்திருந்தன. அம்மலர்களிலே வண்டுகள் சில வந்திறங்கிப் பூவுக்கு ஒன்றாக உட்கார்ந்தன. ஒரு வண்டுக்குப் பூ கிடைக்கவில்லை. ஆகவே வந்த வண்டுகள் எல்லாம் எழுந்து பூ ஒன்றுக்கு இரண்டு வண்டுகளாக இறங்கின. இப்பொழுது ஒரு பூ எஞ்சியது. ஆயின், வந்த வண்டுகள் எத்தனை? மலர்ந்திருந்த மலர்கள் எத்தனை? என்று கேட்கில், வந்த வண்டுகள் (ச) நான்கு. மலர்ந்திருந்த பூக்கள் (ந) மூன்று.

## சூ சூ. எலுமிச்சம்பழக் கணக்கு

வரதாபுரம் என்கிற ஒரு பட்டணத்தில் ஒரு பெருஞ் செல்வன் இருந்தான். ஓர் எலுமிச்சம்பழத் தோட்டம் அவனுக்கு இருந்தது. அத்தோட்டத்திற்கு ஐந்து வாயில்கள் இருந்தன. ஐந்து வாயில்களுக்கும் செல்வன் ஐந்து காவற்காரர்களை ஏற்படுத்தி, அத்தோட்டத்தைக் கருத்துடன் பாதுகாக்கும்படி திட்டஞ் செய்திருந்தான். அவ்வூரை ஆளுகிற அரசன், தன் வேலைக்காரனைக் கூப்பிட்டு, அத் தோட்டத்திற்குப் போய், நீராடுவதற்காக ஓர் எலுமிச்சம்பழம் கொண்டுவருமாறு

கட்டளையிட்டான். அவ் வேலைக்காரன் அத் தோட்டத்திற்குப்போய் உள்ளே செல்ல முயலும்போது, முதல் வாயிலில் இருந்த காவற்காரன், “தோட்டத்திற்குள்ளே போகக்கூடாது” என்று சொல்லித் தடுத்தான். அரசனுடைய வேலைக்காரன் காவற்காரனைப் பார்த்து, “நான் அறுத்துவரும் பழத்தில் உனக்குப் பாதி பங்கிட்டுத் தந்து, என் பாகத்திலும் ஒரு பழந் தருகிறேன்” என்று சொன்னான். அதற்கு காவல்காரன் இணங்கி, “நல்லது போ” என்று சொன்னான். இவ்வாறே மற்றைக் காவற்காரர்களுக்கும் கூறி உடன்படிக்கை செய்து கொண்டு தோட்டத்திற்குள் நுழைந்தான். பழம் அறுத்துக்கொண்டு திரும்பி வருகையில், முன் சொல்லியிருந்த ஐந்து வாயிற்காவற்காரருக்கும் பாதி, பாதி பங்கிட்டுக் கொடுத்துவிட்டுத் தன் பங்குப் பழத்திலும் ஒவ்வொரு பழம் கொடுத்துவிட்டு அரசனுக்கும் ஒரு பழங்கொண்டு வந்து கொடுத்தான். தோட்டத்திலிருந்து அறுத்துக் கொண்டுவந்த பழங்கள் எத்தனையென்றால் ௯௪. இதனைப் பங்கிட்டுக் கொடுத்த விவரம் எப்படியென்றால்;

முதல் காவல்காரனுடைய வீதப்படி ௪௭ பழங்கொடுத்துத் தன் பங்குப் பழத்திலேயும் ஒரு பழங் கொடுத்தான். ஆக நாற்பத்தெட்டுப் பழங்கள் போக, எஞ்சி நின்ற பழம் ௪௬. இரண்டாவது காவற்காரன் வீதப்படி ௨௩ பழங்கள் கொடுத்துவிட்டுத் தன் பங்குப் பழத்திலேயும் ஒரு பழம் கொடுத்தான். ஆக ௨௪ பழமாகையால் எஞ்சிநின்ற பழம் ௨௨. மூன்றாவது காவற்காரனுக்கு அவன் பங்கு வீதப்படி ௰௧ பழமும், தன் பங்குப் பழத்தில் ஒரு பழமுங் கொடுத்ததுபோக எஞ்சிநின்ற பழம் ௰. நான்காவது காவற்காரனுக்கு அவன் பங்கு வீதப்படி ௫ பழமும், தன் பங்குப் பழத்தில் ஒரு பழமும் ஆக ௬ பழம் போக, எஞ்சிநின்ற பழம் ௪. ஐந்தாவது காவற்காரன் பங்கு வீதப்படி ௨ பழமும், தன் பங்குப் பழத்தில் ஒன்றும் ஆக ௩ பழங்கொடுத்துவிட்டு அரசனுக்கும் ஒரு பழங் கொண்டுபோய்க் கொடுத்தான் என்று அறிக.

## ௬௭. குருவிகள் எள்ளைத் தின்ற கணக்கு

ஓர் ஊரிலே ஓர் எண்ணெய் வாணியன் இருந்தான். அவன் ௬௰ மரக்கால் எள்ளுப்பொதியை ஓர் எருதின்மேல் ஏற்றிக்கொண்டு சென்றான். வழியிலே அவ்வெருது துள்ளிப் பொதியை விரைவாகக் கீழே தள்ளிவிட்டது. விழுந்த விசையில் கோணியறுந்து எள்ளு இறைந்து போய்விட்டது. அந்த எள்ளை ஒன்றாகத் திரட்டி மூட்டையாகக் கட்டி முடிப்பதற்குள் குருவிகள் பல வந்து இறங்கி அந்த அறுபது மரக்கால் எள்ளையுந் தின்றுவிட்டன. அதைக்கண்ட வாணியன் சினங்கொண்டு குருவிகளின் மீது ஒரு கல்லை விட்டெறிந்தான். கல்லடிபட்ட ஒரு குருவி இறந்துபோய்விட்டது. அதை வாணியன் எடுத்து அதன் வயிற்றைக் கீறி ஆராய்ந்து பார்த்தான். ஓர் ஆழாக்கு எள்ளு இருந்தது. ஆகவே, அறுபது மரக்கால் எள்ளையுந்தின்ற குருவிகள் எத்தனையென்று கணக்கிட்டுப் பார்க்கத் தொடங்கினான்.

அறுபது மரக்காலையும் படியாக்க ௬௰ X ௮ = ௪௮௰, இதனை ஆழாக்குப் படுத்த ௪௱ X ௮ = ௩௲௨௱; ௮௰ X ௮ = ௬௪௰ ஆக, ௩௲௮௱௪௰. ஆகவே இந்த மொத்தத்தையே குருவிகள் என்று அறிந்துகொண்டான்.

## சூஅ. குருவிகள் நெல்லைத் தின்ற கணக்கு

சிற்றூர் ஒன்றில் இருந்த ஒரு குடியானவன் பன்னிரண்டு மரக்கால் நெல்லை வயலிலே விதைத்தான். அதைக் குருவிகள் வந்து பொறுக்கி எல்லா நெல்லையுந் தின்று விட்டன. குடியானவன் அக் குருவிகள்மீது ஒரு கல்லை விட்டெறிந்தான். கல்லடிபட்டு ஒரு குருவி இறந்துபோய் விட்டது. அக் குருவியின் வயிற்றைக் கீறி ஆராய்ந்து பார்த்தான். மூன்று நெல்கள் இருந்தன. ஆகவே பன்னிரண்டு மரக்கால் நெல்லையும் தின்ற குருவிகள் எத்தனையென்று கணக்கிட்டுப் பார்க்கத் தொடங்கினான்.

யஉ மரக்கால் நெல்லுக்குத் தனி நெல்லுகள் யஙு லட்சத்து அஉகூசா. இந்தத் தொகையை மூன்று பேருக்குக் கொடுக்க, ஙு X ச = யஉ லட்சம் போக, நீக்கி லட்சத்து அஉகூசா. ஙு X சூயகூ = ளஅயகூ நீக்கி உகூசா. ஙு X அா = உகூசா ஆக யஙு லட்சத்து அஉகூசா, ஈவு ச லட்சத்து சூயகூஅா குருவிகள் என்று கொள்க.

## சூகூ. குருவிகளின் கணக்கு

காவேரியாற்றின் பக்கத்தில் தளிர்த்தோங்கி வளர்ந்திருந்த ஓர் ஆலமரத்தின் மீது ஊர்க்குருவியொன்று உட்கார்ந்துகொண்டிருந்தது. அப்பொழுது அவ்வழியாக விண்ணிலே பல குருவிகள் பறந்துவந்தன. அவைகளைக் கண்டதும் மரத்தின்மீதிருந்த ஊர்க்குருவியானது பறந்து வருகிற குருவிகளைப் பார்த்து, "விண்ணிலே மகிழ்ச்சியுடன் பறந்து வருகிற நூறு குருவிகளே! நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டது. அதற்கு மேலே பறந்துசென்ற குருவிகள் ஊர்க்குருவியைப் பார்த்து, "நாங்கள் மட்டும் ள குருவிகளாக மாட்டோம். நாங்களும், எங்கள் இனமும், எங்கள் இனத்திற் பாதியும், மேற்படி பாதியிற் பாதியும் நீயுஞ் சேர்ந்தால், நூறு குருவிகள் ஆகக் கூடும்" என்று கூறின. "அஃதெவ்வாறு?" என்று ஊருக் குருவி கேட்டது. அதற்குப் பறந்துசென்ற குருவிகள், "நாங்கள் என்ற மொத்தக் குருவிகள் ஙசூ, எங்கள் இனமென்ற குருவிகள் ஙசூ, இனத்திற் பாதியென்ற குருவிகள் யஅ. மேற்படி பாதியிற் பாதியென்ற குருவிகள் கூ; நீ ஒன்று கூடினால் ஆகக் குருவிகள் ள என்று சொல்லின.

## எ0. படைகளைக் கோபுர நிலைகளிற் பிரித்துவைத்த கணக்கு

சண்முகபுரம் என்னும் பட்டணத்தில் ஓர் அரசன் இருந்தான். அவனுடைய பெயர் சந்திரசேகரன். அப்பட்டணத்திலே, "ஆதிபுரீசுவரர் கோவில்" என்னும் பெயரோடு கோவில் ஒன்று இருந்தது. அரசன் அக்கோவிலுக்கு ஒன்பது நிலைக்கோபுரம் ஒன்று கட்டிவைக்கும்படி கட்டளையிட்டிருந்தான். கோபுரங் கட்டி முடிந்த செய்தி தெரிந்தவுடனே, கோபுரத்தைப் பார்வையிடுவதற்காகத் தன்னுடைய படைகளுடனே அரசன் புறப்பட்டான். கோபுரத்தினிடம் வந்து சேர்ந்ததும், தன்னோடு கூட வந்த படைகளில் பாதியை முதல்நிலையில் வைத்துவிட்டு, மற்றைப் பாதிப் படைகளோடு இரண்டாவது நிலைக்குச் சென்றான். அவ்விடத்திற் பாதியிற் பாதிப் படையை வைத்துவிட்டு, எஞ்சிய படைகளோடு கோபுரத்தின் மூன்றாவது நிலைக்குச்

சென்றான். அவ்விடத்திலும் அவ்வாறே படைகளை வைத்துவிட்டு நான்காவது நிலைக்குச் சென்றான். முன் சொல்லியிருக்கிறபடியே நிலைக்கு நிலை எட்டாவது நிலைவரை படைகளை வைத்துவிட்டு மேலே கோபுரத்தின் ஒன்பதாவது நிலைக்குச் சென்றான். அப்பொழுது கோபுரம் அசைந்தது.

கோபுரம் அசைதலைக் கண்ட அரசன் மிக விரைவாகப் படைகளையெல்லாஞ் சேர்த்துக்கொண்டு கோபுரத்தின் முதல்நிலைக்கு வந்தான். ஒவ்வொரு நிலைக்கும் படைகளைச் சரியாகப் பங்கிட்டு நிறுத்தினான். அதன் பிறகு கோபுரம் அசையாமல் நின்றுவிட்டது.

“அரசனைத் தொடர்ந்து வந்த படைகளை எத்தனை? நிலைக்குநிலை எவ்வாறு நிறுத்தினான்” என்று கேட்டால்; அரசனைத் தொடர்ந்து வந்த படைகள் அயசூ லட்சத்து சயகூ. முதல்நிலையில் நின்ற படைகள் சயங லட்சத்து உயகூ. இரண்டாவது நிலையிற் பிரித்துவைத்த படைகள் உக லட்சத்து சூயகூ. மூன்றாவது நிலையிற் பிரித்துவைத்த படைகள் ய லட்சத்து அயகூ. நான்காவது நி்லையிற் பிரித்து வைத்த படைகள் ரு லட்சத்து சயகூ. ஐந்தாவது நிலையிற் பிரித்து வைத்த படைகள் உ லட்சத்து எயகூ. ஆறாவது நிலையிற் பிரித்து வைத்த படைகள் க லட்சத்து ஙருகூ. ஏழாவது நிலையிற் பிரித்து வைத்த படைகள் சூஎகூருா. எட்டாவது நிலையிற் பிரித்து வைத்த படைகள் ஙஙகூளாருய. ஒன்பதாவது நிலைக்குப் போகும்போது ஙஙகூஎருய படைகளோடு போனதால் கோபுரம் அசைந்த படியினாலே அந்தந்த நிலையில் இருந்த படைகள் யாவற்றையும் கூட்டிக்கொண்டு முதனிலைக்கு வந்து சேர்ந்து ஒன்பது நிலைகளுக்கும் படைகளைச் சரியாகப் பிரித்து வைத்தான்.

அஃதெவ்வாறென்றால், கூ பேருக்கு அசூ லட்சத்து சயகூ-த்தைக் கொடுக்க, கூ X கூ = அயக லட்சம், கூ X சூயகூ = ரு லட்சத்து சயகூ, ஆக ஈவு கூ லட்சத்து சூயகூ, ஆதலால் ஒவ்வொரு நிலைக்கு கூ லட்சத்து சூயகூ படைகளை நிறுத்தினான் என்று அறிக.

எக. முள்ளம் பன்றியை நாய் பிடித்த கணக்கு

ஒரு முள்ளம் பன்றி நாள் ஒன்றுக்கு முப்பது காதம் ஓடக் கூடியது. அப் பன்றியைப் பிடிக்க ஒரு நாயானது அதனைப் பின்தொடர்ந்து ஓடத் தொடங்கியது. அந்நாயானது முதல்நாள் ஒரு காதமும் இரண்டாம் நாள், இரண்டு காதமும், மூன்றாம் நாள் மூன்று காதமும், நான்காம் நாள் நான்கு காதமும் இவ்வாறே நாளுக்கு நாள் ஒவ்வொரு காதம் அதிகமாக ஓடுமானால் அப் பன்றியை எத்தனை நாளையிற் பிடிக்கும்?

இதற்கு விடை ருகூ நாளிற் பிடிக்கும் என்று கூறுக. எவ்வாறெனில், மேற்படி பன்றி ஓடின நாள் க-க்கும், காதம் ஙய-க்கும், அந்நாய் பிடித்த நாள் ருகூ-க்கும் மாற, ருய X ஙய = கூருா, ஙய X கூ = உளஎய, ஆக கூளஎய காதமாதலால் நாள் ஒன்றுக்குக் காதம் க ஆக நாளுக்கு நாள் ஒவ்வொரு காதம் அதிகமாக ஓடுதலால் ருகூ நாளையிற் பிடிக்கும் என்று அறிக.

## எஉ. முத்துமாலை அறுப்புண்ட கணக்கு

கட்டளைக் கலிப்பா

நோத்த முத்தணி குங்குமக் கொங்கையார்
 கூடியாடிக் குலாவும் சலவியில்
ஆர்த்த பாரிலொன் றஞ்சிலொன் றாறிலொன்
 றமளி மெத்தைமேல் மிதந்திடு மூன்றிலொன்(று)
ஏத்த கணவன்பால் ஈரஞ்சும் ஈரெட்டும்
 ஏலவார்குழல் கையினில் எட்டி லொன்(று)
ஓர்த்த நூலில் எழுபத்தி ரண்டுமே
 உலகுள் ளோரிதைப் பகுத்திட வேணுமே.

வெண்பா

பாராண்ட மன்னனவன் பார்த்தந் தமளியிலே
ஓராண்டு நாளைக் குறுதிகேள் - சீராண்டு
நானான்கி வேபெருக்கி நன்றாய்த் தொகைசேர்க்கில்
ஆனாதே முத்துவட மாம்.

உரை : அரசனும் அவனுடைய மனைவியுமாய் அந்தப் புரத்திலே இருந்தார்கள். அப்பொழுது அரசனுடைய கை அவனுடைய மனைவியின் முத்துமாலையிலே பட்டு அம்மாலையறுந்து முத்துக்கள் கீழே உதிர்ந்தன. அதைப் பார்க்கும்பொழுது நிலத்தில் ஐந்திலொரு பங்கும், ஆறிலொரு பங்கும் மெத்தையின்மேல் மூன்றிலொரு பங்குமாகக் காணப்பட்டன. இதுவுமல்லாமல் அரசன் தன்னுடைய இரண்டு கையையும் ஏந்தியபொழுது, ஒரு கையில் பதினாறில் ஒரு பங்கும், அரசன் மனைவி கையை ஏந்தியபோது எட்டில் ஒரு பங்குமாக இருந்தது. நூலைப் பார்க்கும்பொழுது எழுபத்திரண்டு முத்துக்கள் நின்றன. ஆகவே அரசனுடைய மனைவியின் முத்து மாலையில் இருந்த முத்துக்கள் எத்தனையென்றும், நிலத்தில் விழுந்த முத்துக்கள் எத்தனையென்றும், மெத்தையின் பேரில் விழுந்த முத்துக்கள் எத்தனையென்றும், அரசியினுடைய கையில் இருந்த முத்துக்கள் எத்தனையென்றும், நூலில் இருந்த முத்துக்கள் எத்தனையென்றும் அறிந்துகொண்டு, மாலையில் இருந்த மொத்த முத்துக்கள் எத்தனையென்று சொல்லுமாறு;

ஓராண்டிற்கு நாள் ஙசூய. இதைப் பதினாறிற் பெருக்க, ஙா X ய = ஙசூ, சூய X ய = சூா, ஙா X சூ = சூஅா, சூய X சூ = ஙசூய, ஆக ருசூளாசூய, ஆகையால் பதினாறு ஆண்டுக்கு நாள் ருசூளாசூய என்று அறிந்துகொண்டு, இதற்கு நிலத்தின் பேரில் ரு-ல் க-க்கு முத்து சூாருயஉ, சூ-ல் க-க்கு முத்து கூாசூய, மெத்தையின் பேரில் ங-ல் க-க்கு முத்து சூகூஉய, அரசன் கையில் ய-ல் க-க்கு முத்து ருாஎயசூ, யசூ-ல் க-க்கு முத்து ஙசூய, அரசியின் கையில் அ-ல் க-க்கு முத்து எஉய, நூலில் இருந்த முத்து எயஉ. ஆக முத்து ருசூளாசூய முத்துக்களைக் கொண்டது அம்மாலை என்று அறிக.

## ௭௩. எலுமிச்சம்பழக் கணக்கு

முன்னாளில் புண்டரீகன் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். தோட்டக்காரன் ஒருவன் அந்த அரசனைப் பார்க்க வந்தபொழுது எலுமிச்சம் பழங்களைக் கொண்டுவந்து காணிக்கையாகக் கொடுத்துக் கண்டு கொண்டான். அந்த எலுமிச்சம்பழங்களை அரசன் பார்வையிட்டுத் தான் ஒரு பழத்தை எடுத்துக்கொண்டான். எஞ்சிய பழங்களை அரண்மனையில் இருந்த தன்னுடைய மனைவிமாரிடத்திற்கு அனுப்பி வைத்தான். அவனுக்கு மனைவிமார் நால்வர். முதல் மனைவிக்கு ஒரு பிள்ளை, இரண்டாவது மனைவிக்கு இரண்டு பிள்ளை, மூன்றாவது மனைவிக்கு மூன்று பிள்ளை, நான்காவது மனைவிக்கு நான்கு பிள்ளை.

இவர்களிலே முதலில் மூத்தவள் தன் பிள்ளையோடு வந்து பிள்ளை கையில் ஒரு பழத்தை எடுத்துக் கொடுத்து விட்டு மற்றவைகளை நான்கு பங்காகப் பிரித்து அவைகளில் தான் ஒரு பங்கை எடுத்துக்கொண்டு போய்விட்டாள்.

பிறகு இரண்டாவது மனைவி வந்து தன் பிள்ளைகள் இரண்டின் கையிலும் இரண்டு எலுமிச்சம்பழங்களைக் கொடுத்துவிட்டு இவளும் மூத்தவள் செய்ததைப் போலவே நான்கு பங்காகப் பிரித்துத் தான் ஒரு பங்கை எடுத்துக் கொண்டு போய்விட்டாள்.

இவ்வாறே மற்றைய இரண்டு மனைவிமார்களும் அவரவர்களுடைய குழந்தைகளோடும் வந்து, முன்னைய இருவரும் செய்ததைப் போலவே இவர்களும் நான்கு பங்குகளாகப் பிரித்துப் பங்கு விழுக்காடு தாங்கள் எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். பிறகு சில பழங்கள் அவ்விடத்திலே எஞ்சியிருந்தன.

பிறகு அரசன் கொலுவைவிட்டு அந்தப்புரத்திற்குச் சென்றபோது அங்கிருக்கும் பழங்களைக் கண்டான். அவைகளைத் தன் மனைவிமார் நான்கு பேருக்கும் நான்கு பங்காகப் பிரித்தான். ஒரு பழங் குறைந்தது. தான் முதலில் எடுத்து வைத்திருந்து கொண்டு வந்த பழம் ஒன்றையும் அதனோடு சேர்த்துச் சரிப்படுத்தி மனைவிமார்கள் நான்கு பேருக்குங் கொடுத்துவிட்டான். இவ்வாறாயின் முதலில் தோட்டக்காரன் அரசனுக்குக் காணிக்கை கொண்டுவந்து வைத்த பழங்கள் எத்தனை?

தோட்டக்காரன் கொண்டு வந்த பழங்கள் ௫௱௨௰௨. இவைகளில் அரசன் எடுத்துக்கொண்ட ஒன்றுபோக எஞ்சியவை ௫௱௨௰௧. இந்த ஐந்நூற்று இருபத்து ஒன்றிலே முதல் மனைவி தன் மகனுக்குக் கொடுத்த பழம் ௧. மற்றவைகளை நான்கு பங்காகப் பிரிக்கப் பங்கு ௧-க்கு ௱௩௰ பழமாகையால், தான் ஒரு பங்கு எடுத்துக் கொண்டு சென்ற பிறகு, அவ்விடத்திலே எஞ்சி நின்ற பழங்கள் ௩௱௯௰.

இவைகளை இரண்டாவது மனைவி தன் பிள்ளைகளோடு வந்து இரண்டு பிள்ளைகளிடத்திலும் இரண்டு பழங்களைக் கொடுத்துவிட்டு, மற்றை ௩௱௮௰௮ பழங்களை நான்கு பாகமாகப் பிரிக்கப் பாகம் ஒன்றுக்கு ௯௭ பழமாகையால், தான் ஒரு பாகத்தை எடுத்துக்கொண்டு போய்விட்டாள்.

மூன்றாவது மனைவி தன் பிள்ளைகளோடு வந்து இரண்டாவது மனைவி எடுத்துக்கொண்டு போன பழங்கள் போக ஊாகூயக பழங்கள் அவ்விடத்தில் இருந்தமையால் அவற்றில் ங பழங்களைத் தன்னுடைய பிள்ளைகள் கையிலே கொடுத்துவிட்டு எஞ்சிய ஊாஅயஅ பழங்களை முறைப்படி நான்காகப் பங்கிட்டுப் பார்த்தபோது பங்கு க-க்குப் பழம் எயஉ ஆகையால் அப் பங்கு நான்கில் அவள் ஒரு பாகத்தை எடுத்துக்கொண்டு போனதுபோக அவ்விடத்திலே எஞ்சி நின்ற பழங்கள் ஊாகயசு.

இவைகளை நான்காவது மனைவி பார்வையிட்டுத் தன் பிள்ளைகள் நான்கின் கையிலும் நான்கு பழங்களைக் கொடுத்துவிட்டு மற்றவைகளை முதல் மூன்று பேரும் எவ்வாறு செய்தார்களோ அவ்வாறு பங்கிட்டுப் பங்கு க-க்கு ருங பழமாகையால் தான் ஒரு பாகத்தை எடுத்துக்கொண்டு எஞ்சிய ாருயகூ பழங்களையும் அவ்விடத்திலேயே வைத்துவிட்டுப் போய்விட்டான்.

இவைகளை அரசன் பார்த்துத் தான் தன் மனைவியர் நால்வர்க்கும் நான்கு பங்குகளாகப் பிரிக்கையில் ஒரு பழங் குறைந்தது எனவே தன் கையில் இருந்த ஒரு பழத்தைப் போட்டு அவர்கள் ஒவ்வொருவர்க்கும் சய பழங்கள் விழுக்காடு கொடுத்தான் என்று அறிக.

### எச. மிளகுக் கணக்கு

திருத்தணிகை என்கிற பட்டணத்தில் ஒரு செட்டி வாணிகஞ் செய்து கொண்டிருந்தான். அவனுக்குப் பத்துப் பிள்ளைகள் பிறந்தார்கள். அப் பிள்ளைகள் வளர்ந்து அகவை ஐந்து அடைந்தார்கள். செட்டி அவர்களைப் பள்ளிக்கூடத்தில் வைத்தான். அவர்கள் எல்லாக் கல்வியையும் நன்கு கற்றுத் தேறினார்கள். செட்டி தன்னுடைய பிள்ளைகளின் திறமையை ஆராய்ந்து பார்க்க விரும்பினான். முதலாவது பிள்ளையைக் கூப்பிட்டு அவன் கையில் பத்துப் பணத்தைக் கொடுத்தான். ''மலிவான இடத்திற்குப் போய்ப் பத்துப் பணத்திற்கும் மிளகு வாங்கிவந்து குறைந்த இடத்திலே மிளகை விற்றுத் தான் கொடுத்த பணத்திற்குப் பணங் கொண்டுவருமாறு சொன்னான்.

இரண்டாவது பிள்ளையைக் கூப்பிட்டு அவனிடத்திலே ஒன்பது பணங் கொடுத்துத், தமையன் வாங்கின இடத்தில் தானே மிளகு வாங்கித் தமையன் விற்ற இடத்தில் தானே விற்றுத், தமையன் எவ்வளவு ஊதியந் தேடுகிறானோ அவ்வளவு ஊதியந்தேடி மூத்தவன் கொண்டுவருகிற பணம் எவ்வளவோ அவ்வளவு பணங் கொண்டுவருமாறு சொன்னான்.

மூன்றாவது பிள்ளையைக் கூப்பிட்டு அவன் கையில் எட்டுப் பணங்கொடுத்து அவனுக்கும் அவ்வாறாகவே கட்டளையிட்டான்.

நான்காவது பிள்ளையைக் கூப்பிட்டு அவன் கையில் ஏழு பணங்கொடுத்து அவனையும், முன்பிறந்தவர்கள் கொண்ட கடையில்தானே கொண்டு விற்ற இடத்தில்தானே விற்று மூத்தவன் கொண்டுவருகிற பணம் எவ்வளவோ அவ்வளவு கொண்டு வருமாறு சொல்லியனுப்பினான்.

அவனுக்கிளையவன் கையில் ஆறு பணங்கொடுத்து, அவனுக்கும் அவ்வாறே சொல்லியனுப்பினான். அவனுக்கிளையவன் கையில் ஐந்து பணங்கொடுத்து அவனுக்கும் அவ்வாறே சொல்லியனுப்பினான். அவனுக்கு இளையவன் கையில் நான்கு பணங் கொடுத்து அவனையும் அவர்களுக்குச் சொன்னவாறே சொல்லியனுப்பினான். அவனுக்கிளையவன் கையில் மூன்று பணங்கொடுத்து அவ்வாறே சொல்லியனுப்பினான். அவனுக்கு இளையவன் கையில் இரண்டு பணங்கொடுத்து அவனுக்கும் முன் பிள்ளைகளுக்குச் சொல்லியவாறே சொல்லியனுப்பினான். கடைசிப் பிள்ளையையுங் கூப்பிட்டுக் கையில் ஒரு பணத்தைக் கொடுத்து அவனுடைய தமையன்மார்கள் வாங்குகிற இடத்தில் தானே வாங்கி, விற்கும் இடத்தில்தானே விற்றுத், தமையன்மார் கொண்டுவரும் பணம் எவ்வளவோ அவ்வளவு கொண்டு வருமாறு கட்டளையிட்டு அனுப்பினான். அவர்கள் அவ்வாறே தந்தையின் மொழிப்படி ஒரே இடத்தில் வாங்கிவிற்ற இடத்தில்மட்டும் மாறுபாடாக விற்று ஒரே அளவுக்குப் பணந் தொகுத்தார்கள். அஃதெவ்வாறெனில் ;

முதலாவது பையன் பணம் க-க்குப் பலம் ய ஆகப் பணம் ய-க்கு மிளகு பலம் ௱. விற்றது பணம் க-க்குப் பலம் ருவ. யகூ பணத்துக்கு மிளகு பலம் கூயகூஜ போக நின்ற அதிகப்படியான பலம் கவ-க்கு கிராக்கியாக விற்றபொழுது பணம் க-க்குப் பலம் கவ-க்கு விற்று, ஆகப் பணம் உய-ம் சரியாக்கிக் கொண்டுவந்து தகப்பனாரிடத்தில் கொடுத்தான்.

இரண்டாவது பையன் தான் கொண்டுபோன பணம் கூ-க்கு கூய பலம் மிளகு வாங்கினான். விற்றபொழுது பணம் க-க்குப் பலம் ருவ ஆகப் பணம் கஎ-க்குப் பலம் அகூவ போக நீக்கி நின்ற பலம் ஜ-க்கு விலை கிராக்கியாக வந்தவிடத்தில் பணம் ஒன்றுக்குப் பலம் (வ) காலாகப் பணம் (௩) மூன்றுக்குப் பலம் (ஜ) முக்காலையும் விற்றான். ஆகவே, பணம் (உய) இருபதுக்குஞ் சரியாக விற்று விட்டான்.

மூன்றாவது பையன் தான் கொண்டுபோன பணம் அ-க்கு அய பலம் மிளகு வாங்கினான். பணம் க-க்குப் பலம் ருவ ஆகப் பணம் யரு-க்குப் பலம் எஅஜ போக நீக்கிநின்ற பலம் கவ. இதைப் பணம் க-க்குப் பலம் வ ஆகப் பணம் ரு-க்கு விற்றான். ஆகவே (உய) இருபது பணத்திற்குஞ் சரியாகிவிட்டது.

நான்காவது பையன் தான் கொண்டுபோன பணம் எ-க்கு மிளகு பலம் எய வாங்கினான். பணம் க-க்குப் பலம் ருவ ஆகப் பணம் ய௩-க்கு ௬அவ பலத்தை விற்றான். எஞ்சிநின்ற பலம் கஜ. இந்த (கஜ) ஒன்றே முக்கால் பலத்தையும் பணம் ஒன்றுக்குப் பலம் (வ) காலாக விற்பனை செய்து பணம் (உய) இருபதையுஞ் சரியாக்கிக் கொண்டான்.

ஐந்தாவது பையன் வாங்கிக் கொண்டு போன பணம் ௬. ஆறு பணத்துக்கும் வாங்கிய மிளகு பலம் ௬ய. இதைப் பணம் ஒன்றுக்குப் பலம் ருவ ஆகப் பணம் யக-க்குப் பலம் ருஎஜ விற்றான். எஞ்சிய பலம் உவ. இதைப் பணம் ஒன்றுக்குப் பலம் வ ஆக ஒன்பது (கூ) பணத்துக்கு விற்பனை செய்து பணம் (உய) இருபதையுஞ் சரியாக்கிக் கொண்டான்.

ஆறாவது பையன் வாங்கிக்கொண்டுபோன பணம் ரு. இந்தப் பணம் ஐந்துக்கும் ருய பலம் மிளகு வாங்கினான். பணத்துக்கு ருவ பலம் வீதம் கூ பணத்திற்கு சஎவ பலத்தை விற்றான். எஞ்சிய பலம் (உது) இரண்டே முக்காலையும் பணம் க-க்குக் (வ) கால் பலம் வீதம் (யக) பதினொரு பணத்திற்கு விற்றுப் பணம் (உய) இருபதையுஞ் சரியாக்கிக்கொண்டான்.

ஏழாவது பையன் கையிற் கொடுத்த பணம் ச-க்கும் வாங்கின மிளகு பலம் சய. பணம் க-க்குப் பலம் ருவ ஆகப் பணம் எ-க்குப் பலம் ௩சூது விற்றதுபோக எஞ்சி நின்ற பலம் ௩வ. இதைப் பணம் க-க்குப் பலம் வ ஆகப் (ய௩) பதின்மூன்று பணத்திற்கு விற்றுத் தானும் (உய) இருபது பணத்தைச் சரிசெய்து கொண்டான்.

எட்டாவது பையன் கையில் கொடுத்த பணம் ௩. இந்த மூன்று பணத்துக்கும் வாங்கிய மிளகு பலம் ௩ய. பணம் க-க்குப் பலம் ருவ ஆகப் பணம் ரு-க்கு உசூவ பலம் விற்றதுபோக எஞ்சி நின்ற (௩து) மூன்றே முக்கால் பலத்தையும் பணம் க-க்குக் (வ) கால் பலமாகப் (யரு) பதினைந்தைச் சரிசெய்து கொண்டான்.

ஒன்பதாவது பையன் கையிற் கொடுத்த பணம் உ. இரண்டுக்கு அவன் கொண்ட மிளகு பலம் உய. பணம் க-க்குப் பலம் ருவ ஆக (௩) மூன்று பணத்திற்கு யருது பலம் விற்றதுபோக எஞ்சிநின்ற பலம் சவ. இதைப் பணம் ஒன்றுக்குப் பலம் (வ) காலாகப் (யஎ) பதினேழு பணத்திற்கு விற்று இவனும் (உய) இருவது பணத்தைச் சரியாக்கிவிட்டான்.

பத்தாவது பையன் கையிற் கொடுத்த பணம் க. இவன் பத்துப் பலம் மிளகு வாங்கி ஒரு பணத்துக்கு ருவ பலத்தை விற்றதுபோக எஞ்சிய சது பலத்தையும், பணம் ஒன்றுக்குப் பலம் வ வீதம் (யகூ) பத்தொன்பது பணத்திற்கு விற்றுத் தானும் தன்னுடைய தமையன்மார்களைப் போலவே (உய) இருபது பணம் சரியாக்கிக் கொண்டான்.

### எரு. மாம்பழக் கணக்கு

ஓர் அரசன் தோட்டம் வைத்திருந்தான். ஒருநாள் தன்னுடைய படைகளையெல்லாம் கூட்டிக்கொண்டு தோட்டத்திற்குச் சென்றான். அத் தோட்டத்திற்குப் பத்து வாசல்கள் இருந்தன. முதல் வாசலில் பாதிப் படைகளை நிறுத்தி, இரண்டாம் வாசலிலே எஞ்சிய படைகளிலே பாதியை நிறுத்தி, இவ்வாறே ஒவ்வொரு வாசலிலும் எஞ்சியதில் பாதியை நிறுத்தினான். எல்லா வாசல்களையுங் கடந்து பிறகு எஞ்சிய படைகளை அழைத்துக்கொண்டு உள்ளே சென்றான்.

மாமரங்களின் அடியில் மாம்பழங்கள் உதிர்ந்து கிடந்தன. அவைகளைப் பார்த்த அரசன் தான் ஒரு பழத்தை எடுத்துக்கொண்டான். அரசனுடைய வேலைக்காரன் இரண்டு பழங்களை எடுத்துக்கொண்டான். சேவகன் மூன்று பழங்களை எடுத்துக்கொண்டான். தீவட்டிக்காரன் நான்கு பழம் எடுத்துக்கொண்டான். இவ்வாறே அரசனுடைய பிறகே வந்த படைவீரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பழம் அதிகமாக எடுத்துக் கொண்டார்கள்.

அரசன் எல்லோரையும் அழைத்துக்கொண்டு திரும்பி வெளியே புறப்பட்டான். வாசலுக்கு வாசல் தங்கியிருந்தவர்கள் அரசனைப் பார்த்து, ''உங்களுக்குப் பிறகே வந்தவர்கள் மாம்பழம் கொண்டு வந்தார்கள். வாசலுக்கு வாசல் காத்திருந்த எங்கட்குத்தான் ஒன்றுமில்லை'' என்று சொன்னார்கள். அரசன் தான் எடுத்த பழத்தோடு மற்றவர்கள் எடுத்துவந்த பழத்தையும் வைக்கச் சொல்லி எல்லோருக்கும் ஆளுக்கொரு பழங்கொடுத்தான். எல்லோருக்குங் கொடுப்பதற்குப் பழஞ் சரியாக இருந்தது. ஆகவே அரசனுடன் கூட வந்தவர்களுடைய தொகையென்ன? வெளியே வாசலில் காத்திருந்தவர்கள் எத்தனைபேர்? உள்ளே அரசனைப் பின்தொடர்ந்து சென்றவர்கள் எத்தனை பேர்?

## விவரம் அடியிற் காண்க

அரசன் பிறகே வந்தவர்கள் உய லட்சத்து கூசூதூாஉஅ. முதல் வாசலிலே நின்ற கூட்டம் ய லட்சத்து சயஅதூசூச, இரண்டாவது வாசலிலே நின்ற கூட்டம் ரு லட்சத்து உயசதூ௩உ, மூன்றாவது வாசலிலே நின்ற கூட்டம், உ லட்சத்து சூஉதூயசூ, நான்காவது வாசலிலே நின்ற கூட்டம், லட்சத்து ௩கதூஅ, ஐந்தாவது வாசலிலே நின்ற கூட்டம் சூருதூருாச, ஆறாவது வாசலிலே நின்ற கூட்டம் ௩தூஎருஉ. ஏழாவது வாசலிலே நின்ற கூட்டம் யசூதூ௩எசூ, எட்டாவது வாசலிலே நின்ற கூட்டம் அதூாஅஅ, ஒன்பதாவது வாசலிலே நின்ற கூட்டம் சதூகூச, பத்தாவது வாசலிலே நின்ற கூட்டம் உதூசஎ, உள்ளே போய்த் திரும்பியவர்கள் உதூசஎ.

உதூசஎ-ல் பாதி தூஉ௩௨, இத்துடன் (௨) அரையைக் கூட்டிக்கொள்ள தூஉச, தூஉச-க்கும் உதூசஎ-க்கும் மாற, உதூ X தூ = உயாதூ, உதூ X உய = சயதூ, உதூ X ச = அதூ, தூ X சய = சயதூ, சய X உய = அா, சய X ச = கசூய, தூ X எ = எதூ, உய X எ = ாசய, ச X எ = உஅ ஆக உய லட்சத்து கூசூதூாஉஅ பழமென்றும், அரசனோடு சென்றவர்கள் உய லட்சத்து கூசூதூாஉஅ பேர்களென்றும் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பழம் சரியாகி விட்டதென்றுங் கண்டுகொள்க.

எசூ. விளாம்பழக் கணக்கு

ஒரு சிறுவன் விளாம்பழங்களை விற்பதற்கு ஒரு பட்டணத்துக்குக் கொண்டு சென்றான். அப் பட்டணத்தில் இருந்த குறும்பர்கள் சிலர் சிறுவனிடம் இருந்த பழங்களைக் கொள்ளையடித்துத் தின்றுவிட்டார்கள். சிறுவன் அரசனிடத்திற்குப் போய் முறையிட்டான். அரசன் சிறுவனைப் பார்த்து, ''நீ கொண்டு வந்த பழங்கள் எத்தனை?'' என்று கேட்டான். அதற்கு அச் சிறுவன், ''ஐயா! எனக்குக் கணக்கு ஒன்றுந் தெரியாது. நான் வேறொரு வகையில் கணக்கறிவேன். அஃதென்னவென்றால்; இரண்டாகப் பிரித்தால் ஒரு பழம் மிஞ்சும், மூன்றாகப் பிரித்தால் இரண்டு பழம் மிஞ்சும், நான்காகப் பிரித்தால் மூன்று பழம் மிஞ்சும், ஐந்தாகப் பிரித்தால் நான்கு பழம் மிஞ்சும், ஆறாகப் பிரித்தால் ஐந்து பழம் மிஞ்சும், ஏழாகப் பிரித்தால் சரியாக இருக்கும்'' என்று சொன்னான். ஆகவே சிறுவன் கொண்டுவந்த பழம் எத்தனையென்றால்; இரண்டில் ஒரு பங்குக்குப் பழம் ருகூ. இதுவும் பழம் ருகூ-ம், மிச்சம் க-ம் ஆகப் பழம் ாயகூ. ௩-ல் ஒரு பங்குக்குப் பழம் ௩கூ மிச்சம் உ; ச-ல் ஒரு பங்குக்குப் பழம் உகூ மிச்சம் ௩; ரு-ல் ஒரு பங்குக்குப் பழம் உ௩ மிச்சம் ச; சூ-ல் ஒரு பங்குக்குப் பழம் யகூ மிச்சம் ரு; எ-ல் ஒரு பங்குக்குப் பழம் யஎ. ஆகவே சிறுவனிடமிருந்த பழம் ாயகூ என்று அறிக.

## எஎ. கற்பூரக் கணக்கு

கற்பூரப் பழஞ்சிறிது கொண்டு வந்தேன்
கற்புடைய மங்கையர்க்குப் பாதி யீந்தேன்
தப்பாமல் தம்பியர்க்கு நாலில் ஒன்றும்
சரியாகத் தாயார்க்கு எட்டில் ஒன்றும்
ஒப்பான வேசியர்க்கு ஒன்ப தொன்றும்
உகந்துடனே ஈந்துவிட்டேன் உண்மை யாகக்
கற்பூரப் பழமஞ்சு மீதி கண்டாய்
கணக்கறிந்தோர் வருடத்தில் சொல்வர் தாமே.

உரை : ஒருவன் சிறிது கற்பூரப் பழங்கொண்டு வந்தான். கொண்டு வந்ததில் பாதியைத் தன் மனைவிக்குக் கொடுத்தான். கொண்டு வந்ததில் நான்கில் ஒரு பங்கைத் தன்னுடைய தம்பிக்குக் கொடுத்தான். கொண்டு வந்ததில் எட்டில் ஒரு பங்கைத் தன்னுடைய தாயாருக்குக் கொடுத்தான். கொண்டு வந்ததில் ஒன்பதில் ஒரு பங்கைத் தன்னுடைய கணிகைக்குக் கொடுத்தான். எஞ்சிய பழம் ரு. ஆகவே முதலில் கொண்டு வந்த பழம் எத்தனையென்றால்; ங௬௰ பழம் என்றும் மனைவிக்கு கஅ௰-ம், தம்பிக்கு கூ௰-ம், தாயார்க்கு சரு-ம், கணிகைக்கு ச௰-ம் கிடைத்தன என்றும் சொல்க.

## எஅ. முத்துக் கணக்கு (க)

[ஒன்பது முத்தை மூன்று பேருக்குப் பங்கிட்டுக் கொடுத்த கணக்கு.]

ஒரு செட்டி ஓர் அரசனிடம் ஒன்பது முத்துக்களைக் கொண்டுபோய்க் காட்டினான். அரசன் அந்த முத்துக்களைப் பார்த்துவிட்டு, "இவைகள் என்ன விலை?" என்று கேட்டான். அதற்குச் செட்டி, "முதல் முத்துப் பணம் க. இரண்டாவது முத்துப் பணம் உ. மூன்றாவது முத்துப் பணம் ங. நான்காவது முத்துப் பணம் ச. ஐந்தாவது முத்துப் பணம் ரு. ஆறாவது முத்துப் பணம் ௬. ஏழாவது முத்துப் பணம் எ. எட்டாவது முத்துப் பணம் அ. ஒன்பதாவது முத்துப் பணம் கூ. இவைகளின் விலை இவ்வாறாகும்" என்று சொன்னான். இதனைக் கேட்டு அந்த அரசன், தனக்கு மனைவிமார் மூன்றுபேர் இருக்கிறார்களென்றும் அவர்கள் மூவருடைய மனதிற்கும் நிறைவுண்டாகுமாறு, முத்துஞ் சரியாய் விலையுஞ் சரியாய்ப் பங்கிட்டுச் செட்டியே கொடுக்க வேண்டும் என்று கூறினான். இதனைச் செட்டி பங்கிட்டுக் கொடுத்த விவரம்:

ஒன்பது பேருக்குப் படியடி

கூ X ௨ = ச௨, இத்துடன் (௨) அரையைக் கூட்டிக் கொள்ள ஆக ரு. இதற்கும் முத்து ஒன்பதுக்கும் மாற, கூ X ரு = சரு, ஆகையால் முத்து கூ-க்குப் பணம் சரு, இதற்குப் பங்கு மூன்றான படியால், பங்கு க-க்கு முத்து (ங) மூன்றும், அதற்கு விலை பணம் (௰ரு) பதினைந்தும் சரியாக இருக்க வேண்டுமாகையால் முத்துக் கொடுப்பது எப்படியெனில்;

முதல் மனைவிக்கு முதல் முத்து க, ஒன்பதாவது முத்து க. ஆக முத்து உ-க்குப் பணம் ௰.

இரண்டாவது மனைவிக்கு இரண்டாவது முத்து க, எட்டாவது முத்து க. ஆக முத்து உ-க்குப் பணம் ய.

மூன்றாவது மனைவிக்கு மூன்றாவது முத்து க. ஏழாவது முத்து க. ஆக முத்து உ-க்குப் பணம் ய.

இவைகள் போக நின்ற நான்காவது முத்து க. ஐந்தாவது முத்து க. ஆறாவது முத்து க. ஆக முத்து மூன்றுக்குப் பணம் யரு. ஆகையால் முதற் பங்குக்கு ஆறாவது முத்தைக் கொடுக்க, முத்து ௩-க்கும் விலை பணம் யசா. இரண்டாவது பங்குக்கு நான்காவது முத்தைக் கொடுகக, முத்து ௩-க்கும் விலை பணம் யச. மூன்றாவது பங்குக்கு ஐந்தாவது முத்தைக் கொடுக்க முத்து ௩-க்கும் விலை பணம் யரு.

இவ்வாறு முதற் பங்கில் ஒன்பதாவது முத்தை இரண்டாவது பங்குக்குக் கொடுத்து, இரண்டாவது பங்கில் எட்டாவது முத்தை முதற் பங்குக்குக் கொடுக்கப் பங்கு க-க்கு, முத்து ௩-ம் விலை பணம் யரு-ம் சரியென்று சொல்லவும்.

இதற்குச் சக்கரம் முதற் பங்குக்கு முதல் முத்துக. எட்டாவது முத்து க. ஆறாவது முத்து க. ஆக ௩.

இரண்டாவது பங்குக்கு முதற் பங்குக்கு முதல் முத்து க. ஒன்பதாவது முத்து க. நான்காவது முத்து க. ஆக ௩.

மூன்றாவது பங்குக்கு மூன்றாவது முத்து க. ஏழாவது முத்து க. ஐந்தாவது முத்து க. ஆக ௩.

இவ்வாறு முத்துஞ் சரியாய் விலையுஞ் சரியாய்க் கணக்கிட்டுப் பார்த்துக் கொள்ளவும்.

**இதற்குச் சக்கரம்**

| | | |
|---|---|---|
| க | அ | சா |
| உ | கூ | ச |
| ௩ | எ | ரு |

**எகூ. முத்துக் கணக்கு (உ)**

[இருபத்தைந்து முத்துக்களை ஐந்து பேருக்கு முத்துஞ் சரியாக விலையுஞ் சரியாகப் பங்கிட்டுக் கொடுத்த கணக்கு.]

ஒரு செட்டி இருபத்தைந்து முத்துக்களோடு போய் ஓர் அரசனைக் கண்டான். அரசன் செட்டியைப் பார்த்து அந்த முத்துக்களின் விலை என்னவென்று கேட்டான்.

அதற்குச் செட்டி, "முதல் முத்துப் பணம் க. இரண்டாவது முத்துப் பணம் உ. மூன்றாவது முத்துப் பணம் ௩. நான்காவது முத்துப் பணம் ௪. இவ்வாறே விலை கூட்டிக் கொண்டு போய் உரு-ஆவது முத்தின் விலை உரு பணம் ஆகும்" என்று சொன்னான். இதனைக் கேட்ட அரசனானவன், "எனக்கு மனைவிமார்கள் ஐந்துபேர் இருக்கிறார்கள். அவர்கள் ஐவருக்கும் முத்துஞ் சரியாக விலையுஞ் சரியாக நீயே பங்கிட்டுக் கொடு" என்று சொன்னான். செட்டியானவன் மேற்படி முத்துக்களை எவ்வாறு பங்கிட்டான் என்றால்;

## இருபத்தைந்து பேருக்குப் படியடி

பணம் ௩உரு ஆகையால், பங்கு க-க்கு முத்து ரு-ம் பணம் சுரு-ம் ஆகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டியது.

முதற் பங்குக்கு ஐந்தாவது முத்து க. ஒன்பதாவது முத்து க. பதின்மூன்றாவது முத்து க. பதினேழாவது முத்து க. இருபத்தோராவது முத்து க. ஆக முத்து ரு-க்குப் பணம் சுரு.

இரண்டாவது பங்குக்கு இருபத்தைந்தாவது முத்து க. நான்காவது முத்து க. எட்டாவது முத்து க. பன்னிரண்டாவது முத்து க. பதினாறாவது முத்து க. ஆக முத்து ரு-க்குப் பணம் சுரு.

மூன்றாவது பங்குக்கு இருபதாவது முத்து க. இருபத்து நான்காவது முத்து க. மூன்றாவது முத்து க. ஏழாவது முத்து க. பதினொராவது முத்து க. ஆக முத்து ரு-க்குப் பணம் சுரு.

நான்காவது பங்குக்குப் பதினைந்தாவது முத்து க. பத்தொன்பதாவது முத்து க. இருபத்து மூன்றாவது முத்து க. இரண்டாவது முத்து க. ஆறாவது முத்து க. ஆக முத்து ரு-க்குப் பணம் சுரு.

ஐந்தாவது பங்குக்குப் பத்தாவது முத்து க. பதினான்காவது முத்து க. பதினெட்டாவது முத்து க. இருபத்திரண்டாது முத்து க. முதலாவது முத்து க. ஆக முத்து ரு-க்குப் பணம் சுரு.

இவ்வாறே பங்கிட்டு முத்துஞ் சரியாக விலையுஞ் சரியாகப் பார்த்துக்கொள்ளவும்.

## இதற்குச் சக்கரம்

| | | | | |
|---|---|---|---|---|
| ரு | கூ | ௰௩ | ௰எ | உக |
| உரு | ௪ | அ | ௰உ | ௰சு |
| உ௰ | உ௪ | ௩ | எ | ௰க |
| ௰ரு | ௰கூ | உ௩ | உ | சு |
| ௰ | ௰௪ | ௰அ | உஉ | க |

## அ0. முத்துக் கணக்கு (௩)

[நாற்பத்தொன்பது முத்தை ஏழு பேருக்கு முத்துஞ் சரியாக விலையுஞ் சரியாகப் பங்கிடுங் கணக்கு.]

ஒரு வணிகன் நாற்பத்தொன்பது முத்துக்கள் கோத்த ஒரு முத்துமாலையோடு போய் அரசனைப் பார்த்தான். அரசன் அந்த வணிகனைப் பார்த்து, "இந்த மாலை என்ன விலை?" என்று கேட்டான். அதற்கு வணிகன், இந்த மாலையில் உள்ள முதலாவது முத்துப் பணம் க. இரண்டாவது முத்துப் பணம் உ. மூன்றாவது முத்துப் பணம் ௩. நான்காவது முத்துப் பணம் ௪. இவ்வாறே விலை கூடுதலாகி நாற்பத்தொன்பதாவது முத்தின் விலை ௪௯" என்று சொன்னான். அதனைக் கேட்ட அரசன் களிப்படைந்து, வணிகனைப் பார்த்து, "ஓ வணிகனே! எனக்கு மனைவிமார் ஏழுபேர்கள் இருக்கிறார்கள். எவருக்கும் ஏற்றத்தாழ்ச்சியில்லாமல் ஒரே தன்மையாக, விலையுஞ் சரிப்பட முத்துஞ் சரிப்பட நீயே பங்கிட்டுக் கொடுப்பாயாக" என்று சொன்னான். வணிகன் அதற்கு உடன்பட்டு, அவ்வாறே பங்கிட்டுக் கொடுக்கலானான்.

[முத்து நாற்பத்தொன்பதுக்கும் விலை என்னவெனில், நாற்பத்தொன்பது பேருக்குப் படியடி]

பணம் ௲உஉ௫ ஆகையால், பங்கு க-க்கு முத்து ஏழும் பணம் ௱எ௫-ம் ஆகப் பங்கிட்டுக் கொடுக்கும் விவரம்.

***முதலாவது பங்குக்கு*** ஏழாவது முத்து க, பதின்மூன்றாவது முத்து க, பத்தொன்பதாவது முத்து க, இருபத்தைந்தாவது முத்து க, முப்பத்தோராவது முத்து க, முப்பத்தேழாவது முத்து க, நாற்பத்து மூன்றாவது முத்து க, ஆக முத்து எ-க்குப் பணம் ௱எ௫.

***இரண்டாவது பங்குக்கு*** நாற்பத்தொன்பதாவது முத்து க, ஆறாவது முத்து க, பன்னிரெண்டாவது முத்து க, பதினெட்டாவது முத்து க, இருபத்து நான்காவது முத்து க, முப்பதாவது முத்து க, முப்பத்தாறாவது முத்து க, ஆக முத்து எ-க்கும் பணம் ௱எ௫.

***மூன்றாவது பங்குக்கு*** நாற்பத்திரண்டாவது முத்து க, நாற்பத்தெட்டாவது முத்து க, ஐந்தாவது முத்து க, பதினோராவது முத்து க, பதினேழாவது முத்து க, இருபத்து மூன்றாவது முத்து க, இருபத்தொன்பதாவது முத்து க, ஆ கமுத்து எ-க்குப் பணம் ௱எ௫.

***நான்காவது பங்குக்கு*** முப்பத்தைந்தாவது முத்து க, நாற்பத்தோராவது முத்து க, நாற்பத்தேழாவது முத்து க, நான்காவது முத்து க, பத்தாவது முத்து க, பதினாறாவது முத்து க, இருபத்திரண்டாது முத்து க, ஆக முத்து எ-க்குப் பணம் ௱எ௫.

ஐந்தாவது பங்குக்கு இருபத்தெட்டாவது முத்து க, முப்பத்து நான்காவது முத்து க, நாற்பதாவது முத்து க, நாற்பத்தாறாவது முத்து க, மூன்றாவது முத்து க, ஒன்பதாவது முத்து க, பதினைந்தாவது முத்து க, ஆக முத்து ஏழுக்குப் பணம் ௱எ௫.

## இதற்குச் சக்கரம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ௭ | ௧௩ | ௰௯ | ௨௫ | ௩௧ | ௩௭ | ௪௩ |
| ௪௯ | ௬ | ௰௨ | ௰௮ | ௨௪ | ௩௰ | ௩௬ |
| ௪௨ | ௪௮ | ௫ | ௰௧ | ௰௭ | ௨௩ | ௨௯ |
| ௩௫ | ௪௧ | ௪௭ | ௪ | ௰ | ௰௬ | ௨௨ |
| ௨௮ | ௩௪ | ௪௰ | ௪௬ | ௩ | ௯ | ௰௫ |
| ௨௧ | ௨௭ | ௩௩ | ௩௯ | ௪௫ | ௨ | ௮ |
| ௰௪ | ௨௰ | ௨௬ | ௩௨ | ௩௮ | ௪௪ | ௧ |

***ஆறாவது பங்குக்கு*** இருபத்தோராவது முத்து ௧, இருபத்தேழாவது முத்து ௧, முப்பத்து மூன்றாவது முத்து ௧, முப்பத்தொன்பதாவது முத்து ௧, நாற்பத்தைந்தாவது முத்து ௧, இரண்டாவது முத்து ௧, எட்டாவது முத்து ௧, ஆக முத்து ஏழுக்குப் பணம் ௲௭௫.

***ஏழாவது பங்குக்கு*** பதினான்காவது முத்து ௧, இருபதாவது முத்து ௧, இருபத்தாறாவது முத்து ௧, முப்பத்திரண்டாவது முத்து ௧, முப்பத்தெட்டாவது முத்து ௧, நாற்பத்து நான்காவது முத்து ௧, முதலாவது முத்து ௧, ஆக முத்து ஏழுக்குப் பணம் ௲௭௫.

இவ்வாறு பங்கிட்டு முத்துஞ் சரியாக விலையுஞ் சரியாகப் பார்த்துக்கொள்ளவும்.

## இந்தக் கணக்குகள் பங்கிடும் விவரம்

மேலேயுள்ள சக்கரங்களுக்கு ஒரு பக்கங் கணக்கேயொழிய வேறே இல்லை. இனிமேல் வருஞ் சக்கரங்கள் எந்தப்புறம் பார்த்தாலும் முத்துக் கொடுக்கலாம். கணக்குஞ் சரியாக வரும்.

கீழேகண்ட சக்கரங்களின்படி இருபத்தைந்து முத்தாகட்டும், நாற்பத்தொன்பது முத்தாகட்டும், எண்பத்தொரு முத்தாகட்டும் எத்தனையானாலும் ஒற்றைப்படை முத்தாகில், பங்கின் படிக்குச் சக்கரங்கள் போட்டு எப்பக்கம் பார்த்தாலும் முத்துஞ் சரியாக விலையுஞ் சரியாக வரும்.

## இதற்குச் சக்கரங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| ௰௧ | ௰௮ | ௨௫ | ௨ | ௯ |
| ௰ | ௰௨ | ௰௯ | ௨௧ | ௩ |
| ௪ | ௬ | ௰௩ | ௨௰ | ௨௨ |
| ௨௩ | ௫ | ௭ | ௰௪ | ௰௬ |
| ௰௭ | ௨௪ | ௧ | ௮ | ௰௫ |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ௨௨ | ௩௧ | ௪௰ | ௪௯ | ௨ | ௰௧ | ௨௰ |
| ௨௧ | ௨௩ | ௩௨ | ௪௧ | ௪௩ | ௩ | ௰௨ |
| ௰௩ | ௰௫ | ௨௪ | ௩௩ | ௪௨ | ௪௪ | ௪ |
| ௫ | ௰௪ | ௰௬ | ௨௫ | ௩௪ | ௩௬ | ௪௫ |
| ௪௬ | ௬ | ௮ | ௰௭ | ௨௬ | ௩௫ | ௩௭ |
| ௩௮ | ௪௭ | ௭ | ௯ | ௰௮ | ௨௭ | ௨௯ |
| ௩௰ | ௩௯ | ௪௮ | ௧ | ௰ | ௰௯ | ௨௮ |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ௩௭ | ௪௮ | ௫௯ | ௭௰ | ௮௧ | ௨ | ௰௩ | ௨௪ | ௩௫ |
| ௩௬ | ௩௮ | ௪௯ | ௬௰ | ௭௧ | ௭௩ | ௩ | ௰௪ | ௨௫ |
| ௨௬ | ௨௮ | ௩௯ | ௫௰ | ௬௧ | ௭௨ | ௭௪ | ௪ | ௰௫ |
| ௰௬ | ௨௭ | ௨௯ | ௪௰ | ௫௧ | ௬௨ | ௬௪ | ௭௫ | ௫ |
| ௬ | ௰௭ | ௰௯ | ௩௰ | ௪௧ | ௫௨ | ௬௩ | ௬௫ | ௭௬ |
| ௭௭ | ௭ | ௰௮ | ௨௰ | ௩௧ | ௪௨ | ௫௩ | ௫௫ | ௬௬ |
| ௬௭ | ௭௮ | ௮ | ௰ | ௨௧ | ௩௨ | ௪௩ | ௫௪ | ௫௬ |
| ௫௭ | ௬௮ | ௭௯ | ௯ | ௰௧ | ௨௨ | ௩௩ | ௪௪ | ௪௬ |
| ௪௭ | ௫௮ | ௬௯ | ௮௰ | ௧ | ௰௨ | ௨௩ | ௩௪ | ௪௫ |

## அக. முத்துக் கணக்கு (ச)

ஒரு வணிகன் எண்பத்தொரு முத்துக்களோடு போய் ஓர் அரசனைக் கண்டான். அரசன் வணிகனைப் பார்த்து "இந்த முத்துக்களின் விலை என்ன?" என்று கேட்டான். வணிகன், "முதல் முத்துப் பணம் க. இரண்டாவது முத்துப் பணம் உ. மூன்றாவது முத்துப் பணம் ௩. நான்காவது முத்துப் பணம் ச. ஐந்தாவது முத்துப் பணம் ரு. இவ்வாறு எண்பத்தோராவது முத்துப் பணம் அக," என்று சொன்னான். அரசன் வணிகனைப் பார்த்து, "எனக்கு மனைவிமார் மூவர் இருக்கிறார்கள். அம் மூவருக்கும் முத்துஞ் சரியாக விலையுஞ் சரியாகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும்" என்றான். எவ்வாறு பங்கிடுவதெனின்;

## எண்பத்தொரு பேருக்குப் படியடி

அய X ௯ = சய, க X ௯ = ௯, ஆக சய௯. இத்துடன் (௯) அரையைக் கூட்டிக்கொள்ள ஆக சக. சக-க்கும் அக-க்கும் மாற, அய X சய = ௩௲உா, அய X க = அய, சய X க = சய, க X க = க, ஆ (ஆக) ௩௲௩உக. பங்கு க-க்கு முத்து உஎ பணம் ௲ாஎ.

## இதற்கு முத்துக் கொடுக்கும் விவரம்

***முதல் மனைவிக்கு*** முதல் முத்து முதற்கொண்டு க௩ முத்து வரைக்கும் பணம் கூக, அக முத்து முதல் சுகூ முத்து வரைக்கும் முத்து க௩-க்குப் பணம் கூஎரு, ஆக முத்து உசு-க்குப் பணம் ௲சுசு.

***இரண்டாவது மனைவிக்கு*** கச-ஆவது முத்து முதல் உசு-ஆவது முத்து வரைக்கும் முத்து ய௩-க்குப் பணம் உசுய, சுஅ முதல் ருசு வரைக்கும் முத்து ய௩-க்குப் பணம் அாசு, ஆக முத்து உசு-க்குப் பணம் ௲சுசு.

***மூன்றாவது மனைவிக்கு*** உஎ-ஆவது முத்து முதல் ௩கூ-ஆவது வரைக்கும் முத்து ய௩-க்குப் பணம் சஉகூ, ருரு-ஆவது முதல் ச௩-வரைக்கும் முத்து ய௩-க்குப் பணம் சு௩எ, ஆக முத்து உசு-க்குப் பணம் ௲சுசு. நின்ற முத்து ௩-க்குப் பணம் ாஉ௩.

## முத்துக்களின் விவரம்

சய பண முத்து க, சக பண முத்து க, சஉ பண முத்து க. இவைகளில் முதல் பங்குக்கு சக-ஆவது முத்தைக் கொடுக்க, முதற் பங்குக்கு முத்துக்கள் உஎ; பணம் ௲ாஎ. இரண்டாவது பங்குக்கு சஉ-ஆவது முத்தைக் கொடுக்க, முத்துக்கள் உஎ; பணம் ௲ாஅ - மூன்றாவது பங்குக்கு சய-ஆவது முத்தைக் கொடுக்க முத்துக்கள் உஎ; பணம் ௲ாசு.

ஆகவே முத்துக்கள் மூன்று பங்குக்குஞ் சரி. பணம் இரண்டாவது பங்குக்கு ஒரு பணம் அதிகமும் மூன்றாவது பங்குக்கு ஒரு பணங் குறைவும் ஆனபடியினாலே இரண்டாவது பங்கில் ருசு-ஆவது முத்தை மூன்றாம் பங்கில் கொடுத்து மூன்றாவது பங்கில் ருரு-ஆவது முத்தை இரண்டாவது பங்கிற் கொடுக்கப் பணஞ் சரியாகும்.

## ௮௨. முத்துக் கணக்கு (௫)

ஒரு வணிகனானவன் ௬௪ முத்துக்களோடு போய் ஓர் அரசனைக் கண்டான். அரசன் அந்த முத்துக்களைப் பார்த்துவிட்டு, "இவைகளின் விலை என்ன?" என்று கேட்டான். அதற்கு வணிகன், "முதல் முத்துப் பணம்-௧, இரண்டாவது முத்துப் பணம்-௨, மூன்றாவது முத்துப் பணம்-௩. இவ்வாறே பெருகிக்கொண்டு போய் ௬௪ ஆவது முத்தின் விலை பணம் ௬௪" என்று சொன்னான். இதனைக் கேட்ட அரசன், "எனக்கு மனைவிமார் எட்டுப்பேர் இருக்கிறார்கள். அவர்கள் எட்டுப் பேருக்கும் முத்துஞ் சரியாக விலையுஞ் சரியாகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும்" என்று சொன்னான். வணிகன் அவ்வாறே பங்கிட்டுக் கொடுக்கலானான்.

அறுபத்துநான்கு பேருக்குப் படியடி

௬௰ X ½ = ௩௰, ௪ X ½ = ௨, ஆக ௩௨. இத்துடன் (½) அரை கூட்டிக்கொள்ள ஆக ௩௨½-க்கும் முத்து ௬௪-க்கு மாற, ௬௰ X ௩௰ = ௲௮௱, ௬௰ X ௨ = ௱௨௰, ௬௰ X ½ = ௩௰, ௩௰ X ௪ = ௱௨௰, ௪ X ௨ = ௮, ௪ X ½ = ௨. ஆக ௨௲௮௰. பங்கு ௧-க்கு முத்து எட்டும் இதற்கு விலை பணம் ௨௬௰-ம் என்று சொன்னான். இதற்கு முத்துக் கொடுக்கும் விவரம்.

***முதல் பங்குக்கு*** முதல் முத்து முதல் நான்கு முத்து வரைக்கும், முத்து நான்கிற்குப் பணம் ௰, ௬௪ முதல் ௬௧ வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௨௫௰, ஆக முத்து ௮-க்குப் பணம் ௨௬௰.

***இரண்டாவது பங்குக்கு*** ௫-ஆவது முதல் ௮-ஆவது முத்து வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௨௬, ௬௰ முதல் ௫௭ வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௨௩௪, ஆக முத்து ௮-க்குப் பணம் ௨௬௰.

***மூன்றாவது பங்குக்கு*** ௯-ஆவது முதல் ௧௨-ஆவது வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௪௨, ௫௬ முதல் ௫௩ வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௨௧௮, ஆக முத்து ௮-க்குப் பணம் ௨௬௰.

***நான்காவது பங்குக்கு*** ௧௩-ஆவது முதல் ௧௬-ஆவது வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௫௮, ௫௨ முதல் ௪௯ வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௨௱௨, ஆக முத்து ௮-க்குப் பணம் ௨௬௰.

***ஐந்தாவது பங்குக்கு*** ௧௭-ஆவது முதல் ௨0-ஆவது வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௭௪, ௪௮ முதல் ௪௫ வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௧௮௬, ஆக முத்து ௮-க்குப் பணம் ௨௬௰.

***ஆறாவது பங்குக்கு*** ௨௧-ஆவது முதல் ௨௪-ஆவது வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௯௰, ௪௪ முதல் ௪௧ வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் ௧௭௰, ஆக முத்து ௮-க்குப் பணம் ௨௬௰.

***ஏழாவது பங்குக்கு*** உரு-ஆவது முதல் உஅ-ஆவது வரைக்கும் முத்து நான்குக்குப் பணம் ராசூ, ***ச***ய முதல் ௩எ வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் கரு***ச***, ஆக முத்து அ-க்குப் பணம் உசூய.

***எட்டாவது பங்குக்கு*** உகூ-ஆவது முதல் ௩உ-ஆவது வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் கஉஉ, ௩சூ முதல் ௩௩ வரைக்கும் முத்து நான்கிற்குப் பணம் க௩அ, ஆக முத்து அ-க்குப் பணம் உசூய.

இவ்வாறு ஒவ்வொரு பங்குக்கும் முதல் முத்து நான்கும் கடைமுத்து நான்கும் முதலுங் கடையுமாகக் கூட்டி ஒவ்வொரு பங்கிற்கும் அ முத்துக் கொடுக்க சரியாகிவிட்டது.

## அ௩. சேமக்கலக் கணக்கு

ஒரு சேமக்கலத்தின் நிறை பத்தரைப் (ய௨) பலம். அதை ஏழு சுற்றாகச் சரியாய்ப் பங்கிட்டு அறுத்தால் சுற்று க-க்கு எத்தனை பலம் என்றால்; ஏழு பேருக்குப் படியடி எ X ௨ = ௩௨, இத்துடன் (௨) அரை கூட்டிக்கொள்ள ***ச***. இதை எ-க்கும் ***ச***-க்கும் மாற, எ X ***ச*** = உஅ, இதற்குப் பலம் பத்தரை (ய௨) ஈய, உய X வ = ரு, அ X வ = உ, உய X ஹு = உ௨, அ X ஹு = க. ஆக ய௨, சரி ஈவு வஹு ஆகையால், முதல் சுற்று க-க்கு மாற, க X வ = வ, க X ஹு = ஹு, ஈவு வஹு, ஆகையால் முதல் சுற்றுக்குப் பலம் வஹு-க்கும், இரண்டாஞ் சுற்று ஈவு வஹு-க்கு மாற, உ X வ = ௨, உ X ஹு = வ, ஆக ஆ. இரண்டாஞ் சுற்றுக்குப் பலம் ஆ மூன்றாஞ் சுற்றுக்கு, ௩ X வ = ஆ, ௩ X ஹு = வஹு, ஆக கஹு, நான்காஞ் சுற்றுக்கு ***ச*** X வ = க, ***ச*** X ஹு = ௨, ஆக க௨, ஐந்தாம் சுற்றுக்கு ரு X வ = கவ, ரு X ஹு = ௨ஹு, ஆக கஆஹு, ஆறாஞ் சுற்றுக்குப் பலம் உவ, ஏழாஞ் சுற்றுக்குப் பலம் உ௨ஹு, ஆகச் சுற்று ஏழுக்குப் பலம் ய௨, இவ்வாறு எவ்வளவானாலும் பார்த்துக் கொள்ளவும்.

## அ***ச***. தட்டுக் கணக்கு

ஒரு தட்டின் நிறை பலம் ய. இதை நான்கு சுற்றாக அறுத்தால், சுற்று க-க்குப் பலம் எத்தனையென்றால்; நான்கு பேருக்குப் படியடி ய, இதற்குப் பலம் ய, ஈய, ஈவு க. ஆகையால் உட்சுற்றுக்குப் பலம் க. இரண்டாஞ் சுற்றுக்குப் பலம் உ, மூன்றாஞ் சுற்றுக்குப் பலம் ௩, நான்காஞ் சுற்றுக்குப் பலம் ***ச***, ஆகச் சுற்று ***ச***-க்கும் பலம் ய-க்குஞ் சரி என்று சொல்லவும்.

## அரு. ஊர் பங்குக்காரர் கணக்கு (க)

ஓர் ஊரில் குத்தகைப் பணம் கூ. அந்த ஊரிலே குடிகள் ஆறிலொரு பங்குடையான் ஒருவன், நான்கில் ஒரு பங்குடையான் ஒருவன், மூன்றில் ஒரு பங்குடையான் ஒருவன் இவர்கள் மூன்றுபேருங் குத்தகை செய்திருக்கையில் குத்தகைப் பணம் கூ-க்குப் பிரிவு ஆறிலொரு பங்குக்காரனுக்குப் பணம் க௨, நான்கில் ஒரு பங்குக்காரனுக்குப் பணம் உவ, மூன்றிலொரு பங்குக்காரனுக்குப் பணம் ௩. ஆகப் பணம் சூஆ போக, இனிக் காண வேண்டிய பணம் உவ. ஆகையால் இதற்கு வகை எப்படியென்றால்;

ஆறில் ஒரு பங்குடையான் பணம் க௯, இதற்குக் குத்தகைப் பணம் கூ-க்கு மாற, கூ X க = கூ, கூ X ௯ = ௬௯ ஆக க௩௯. இதைக் கண்ட பணம் சூ௲-க்கீய, சூ X உ = கஉ, உ X ௲ = க௯ ஆக க௩௯, ஈவு உ. நான்கில் ஒரு பங்குடையான் உவ, இதற்குக் குத்தகைப் பணம் கூ-க்கு மாற, கூ X உ = கஅ, கூ X வ = உவ ஆக உ௰வ, இதைக் கண்ட பணம் சூ௲-க்கீய, ௩ X சூ = கஅ, ௩ X ௲ = உவ ஆக உ௰வ, ஈவு ௩. மூன்றில் ஒரு பங்குடையான் பணம் ௩. இதற்குக் குத்தகையப் பணம் கூ-க்கு மாற, ௩ X கூ = உஎ, இதைக் கணட் சூ௲-க்கீய, ௬ X சூ = உ௬, ௬ X ௲ = ௩. ஆக உஎ, ஈவு ௬.

ஆகையால் ஆறில் ஒரு பங்குடையானுக்குப் பணம் உ. நான்கில் ஒரு பங்குடையானுக்குப் பணம் ௩. மூன்றில் ஒரு பங்குடையானுக்குப் பணம் ௬. ஆகக் குத்தகைப் பணம் சரியென்று அறிக.

## அக. ஊர் பங்குக்காரர் கணக்கு (உ)

ஓர் ஊர்க் குத்தகைப் பணம் சூ௰. அதில் இருக்குங் குடிகளில் பாதிக்காரன் ஒருவன், மூன்றில் ஒன்றில் ஒருவன், நான்கில் ஒன்றில் ஒருவன், ஆறில் ஒன்றில் ஒருவன், இவர்கள் இருக்க, இவர்கள் கையில் தட்டான் இறை வாங்கும்படி எப்படியென்றால்; பாதிக்காரன் பணம் ௩௰, மூன்றில் ஒன்றுக்காரன் பணம் உ௰, நான்கில் ஒன்றுக்காரன் பணம் க௫, ஆறில் ஒன்றுக்காரன் பணம் க0 ஆகப் பணம் எ௫. இவ்வாறு நாள்தோறும் வாங்கி அதிகப் பணம் எடுத்துக்கொள்ளுவான்.

இவ்வாறிருக்கையில், அதில் ஒரு பங்குக்காரன் அறிந்து இவன் இவ்வாறு அதிகமாகக் கொண்டுபோகலாமோ என்று சினந்துகொண்டு, கணக்கின்படி பார்க்கச் சொன்னவாறு குத்தகைப் பணம் சூ௰. இதற்குப் பிரிவு பணம் எ௫. இதற்குக் குத்தகைப் பணம் சூ௰ ஈய, எ௰ X ௲ = ௫உ௯, ௫ X ௲ = ௩௲, எ௰ X ப = ௩௯, ௫ X ப = வ, ஆகப் பணம் சூ௰ ஈவு ௲ப. ஆகையால் பாதிக்காரன் பணம் ௩௰ உடனே மாற, ௩௰ X ௲ = உஉ௯. ௩௰ X ப = க௯ ஆக உ௬, மூன்றில் ஒன்றுக்காரன் பணம் உ௰ உடனே மாற, உ௰ X ௲ = க௫, உ௰ X ப = க, ஆக கசூ, நான்கில் ஒன்றுக்காரன் பணம் ௰௫ உடனே மாற, ௰ X ௲ = எ௯, ௰ X ப = ௯, ௫ X ௲ = ௩௲, ௫ X ப = வ ஆக கஉ, ஆறிலொன்றுக்காரன் பணம் பத்துடனே மாற, ௰ X ௲ = எ௯, ௰ X ப = ௯ ஆக அ.

ஆகையால் பாதிக்காரன் உ௬. மூன்றில் ஒரு பங்குடையான் பணம் கசூ, நான்கில் ஒரு பங்குடையான் கஉ, ஆறில் ஒரு பங்குடையான் பணம் அ. ஆகப் பங்கு ௬-க்கு பணம் சூ௰-ம் சரி. இவ்வாறு கொடுத்தார்கள் என்று அறியவும்.

## அஎ. ஆணிக்கோவையறிதல்

கங்கை வேணியன் அருளிய கடுக்கையின் இதழும்
தங்கு கர்ணிகை அகவித முந்தொகை சாற்றில்
பங்கு றாஇரு பஃதின்மேல் ஏழெனப் பகுத்துத்
துங்க ஆணியின் தொடையலாய்த் தொடுத்தனர் அளித்தார். (க)

ஆணிக் கொத்தெனுங் கோவை ஓர்மலர் எனலாகும்
ஏணிற் கட்டுப ஆணியென் றொருபண எடையே
யாணர் காட்டும்அவ் ஆணியின் வண்ணம்ஒன் றாமால்
பாணி ஆணியின் மாற்றெலாம் மேல்இனிப் பகர்வாம். (உ)

## வேறு

ஒருமாற்றுக் கொருகுற்றாம் ஒன்றரைமாற்
றுக்கொருகுற் றொருவெட் டென்ப
இருமாற்றுக் கிருகுற்றாம் இரண்டரைக்குக்
குற்றிரண்டு வெட்டொன் றாகும்
வருமூன்று மாற்றினுக்குக் குற்றொருமூன்
றாகுமென வைத்தார் மேலும்
தருவதொரு மூன்றுகுற்றும் வெட்டொன்றும்
மூன்றரைக்குத் தக்க தம்மா. (ந)

நாலுக்குச் சாய்ப்பிரண்டு மேலாக
நண்ணுநா லரைமாற் றாணி
மேலுக்கு நாற்குற்றும் வெட்டொன்றும்
என்றுரைக்க விளங்கும் ஐந்துக்
கேலுமைந்து குற்றாகும் மேலாக
ஐந்தரைக்கே றியகுற் றைந்தின்
பாலுமொரு வெட்டாகப் பகர்வதொரு
நாலுவெட்டுப் படுமா றுக்கும். (ச)

ஆறேகால் ஆணிக்கே மேலாகப்
புள்ளடிக்கீழ்ச் சாய்ப்பொன் றாகும்
வேறுபடா ஆறரைக்கு மேலொருபுள்
ளடியாகி மேவும் ஒன்றே
தேறுதர்ஆ றேமுக்கால் ஆணிகீழ்ப்
புள்ளடியாய்த் தியங்க மேலும்
ஏறியவெட் டொன்றாகும் ஏழுக்கு
மூன்றேவெட் டிசைவ மேலாய். (ரு)

ஏழேகால் மாற்றாணிக் கெய்துவமே
லொருசாய்ப்பும் ஏழ ரைக்குச்
சூழமேல் இரண்டேவெட் டேழேமுக்
காற்குமேற் றெடுவெட் டொன்றே
தாழ்வுரு எண்மாற்றுக் காணிகீ
ழிருசாய்ப்புத் தயங்கா நிற்கும்
காழ்வருமாற் றெட்டேகாற் காணிகீழ்
ஒருசாய்ப்புக் காணு மாலே. (சா)

எட்டரைமாற் றாணிக்கோர் புள்ளடிக்கீழ்
உற்றிடுமெட் டேமுக் காலுக்
கொட்டியகீழ் வெட்டைந்தே ஒளிருவகீழ்
நால்வெட்டே ஒன்பா னாகும்
வெட்டொருமூன் றுற்றதுகீழ் ஒன்பதே
காலென்ன விளம்பச் சோதி
பட்டொளிரும் ஒன்பதரைக் கிருவெட்டே
ஆணியின்கீழ்ப் பட்ட தன்றே. (எ)

சீர்பரவும் ஒன்பதே முக்கான்மாற்
றாணிக்குச் சிறந்த வெட்டொன்
றேர்பெறக்கீ ழாய்விளங்கும் ஏதமுறா
வாணிதசம் என்ப தோதி
வார்பெருமா டகக்கட்டி மச்சவுரைப்
பசுமைபழுப் புறுத்தல் நீக்கற்
கார்பரவு புவிபுரக்கும் ஆயிரவர்க்
கித்தொகையும் காட்டி மாதோ. (அ)

**வேறு**

மற்றும் வங்கமுட் களிம்புறுத் திடத்தச மாற்றும்
அத்த னோடுமா லயனுமித் தொகையரு ளியதாம்
இத்தி றத்துள திசைத்தனம் இனிநவ மணியின்
பத்தும் விற்றிடு விலையிடை பழுதிவை பகர்வாம். (கூ)

மரக தம்பவ ளம்பத்ம ராகமா நீலம்
புருட ராகங்கோ மேதகம் வச்சிரம் புகழ்சேர்
தரள மால்வயி டூரியந் தகையொளி நீர்மை
உருவி கந்திடா ஒய்யலா நவமணிப் பெயரே. (க0)

மரக தந்தனக் கிரதிமேல் விலைமதிப் பதுவாம்
பொருவில் வச்சிரம் தனக்குமஞ் சாடிமேற் புகறல்
தருது கிர்கெலாம் கழஞ்சிநற் றரளமே சவ்வாம்
குருவி லிங்கமா மணிக்கெலாம் பலகையாற் குறிப்பாம். (கக)

புக்கி னக்குயர் விலையெலாம் கோடிமேற் புகல்வார்
மிக்க கோடியாம் இருபத்தொன் றேமிகு பலகை
தக்க முத்துமுந் நூற்றொரு குடிஞையே தவிரா
தொக்கி லொன்றுசவ் வொன்றுமேல் இப்பரி சுரைப்பாம். ()

மின்னு நாலரை நெல்எடை இரதியாய் விதிப்பாம்
துன்னு நெல்லிரு நாலுமஞ் சாடியாய்ச் சொல்வாம்
பன்னி ரண்டுநெல் எடைப்பண எடையெனப் பகர்வாம்
அன்ன நெல்எடை என்பதும் ஐம்பதோ டாறு. (கரு)

## வேறு

முன்னே உரைத்த படியேநான்
மொழிவேன் மணியின் குறையெல்லாம்
மின்னே யுரைப்பேன் தானத்துக்
கிரனைக் கடுக்க நீரேத்தம்
சென்னீ ரொட்டுப் பற்றுடனே
தேய்ப்புக் குழிவு முன்னேறும்
பன்னீர்க் கரக பாணியெனப்
பகர்வேன் பவளக் குறைசொல்வாம். (கச)

மிக்க திருக்குப் புழுக்கடிமெய்
வெளுப்பு முடக்குச் சொத்தையிவை
செக்கர் மணிக்குக் குறைதீர்த்துத்
தேரைக் கிடைசிங் கத்தவாங்கோ
டெக்கர் பாட்டம் பாமிரனே
நீள ரோம ரேகையுடன்
தக்க படிரத் தீக்குறைச்சல்
தவறா மாங்கிச் செந்தியிவை. (கரு)

உரை : பரமசிவன் அருளிய கொன்றைப் பூவின் இதழ்த்தொகை எத்தனை யென்றால் இருபத்தேழு. இதை ஆணிமாலையாய் அமைத்தனர். ஒரு மலராகிய ஆணிக்கோவையின் ஒவ்வோர் ஆணியினெடை ஒரு பணவெடை. அந்த ஆணியெல்லாம் நிறமொன்றாயிருக்கும்.

இனி அவ்வவ் ஆணிமாற்றைச் சொல்லுகிறோம்.

ஒரு மாற்றுக்கு ஒரு குத்து, க௨ மாற்றுக்கு ஒரு குத்தும் ஒரு வெட்டும், உ மாற்றுக்கு இரண்டு குத்தும், உ௨ மாற்றுக்கு இரண்டு குத்தும் ஒரு வெட்டும், ௩-மாற்றுக்கு மூன்று குத்து, ௩௨ மாற்றுக்கு மூன்று குத்தும் வெட்டு ஒன்றும், ச மாற்றுக்குமேல் சாய்ப்பு இரண்டு, ச௨ மாற்றுக்கு நான்கு குத்தும் வெட்டொன்றும், ரு மாற்றுக்குமேல் குத்து ரு, ரு௨ மாற்றுக்குமேல் குத்து ரு-ம் வெட்டு ஒன்றும், சு மாற்றுக்கு ச வெட்டு, சுவ மாற்றுக்கு மேற்புள்ளடி கீழ்சாய்ப்பொன்று, சு௨ மாற்றுக்கு மேற்புள்ளடியொன்று, சுஞ- மாற்றுக்குக் கீழ்ப்புள்ளடிமேல் வெட்டொன்று, எ மாற்றுக்குமேல் வெட்டு மூன்று, எவ மாற்றுக்குமேல் சாய்ப்பு ஒன்று, எ௨ மாற்றுக்குக் கீழும் மேலும் இரண்டு வெட்டு, எஞ மாற்றுக்கு மேல்வெட்டு ஒன்று, அ மாற்றுக்குக் கீழ்சாய்ப்பு இரண்டு, அவ மாற்றுக்குக் கீழ்சாய்ப்பு ஒன்று, அ௨ மாற்றுக்குக் கீழ்ப்புள்ளடியொன்று, அஞ மாற்றுக்குக் கீழ்வெட்டைந்து, கூ மாற்றுக்குக் கீழ்வெட்டு நான்கு, கூவ மாற்றுக்குக் கீழ்வெட்டு மூன்று, கூ௨ மாற்றுக்குக் கீழ்வெட்டிரண்டு, கூஞ மாற்றுக்குக் கீழ்வெட்டு ஒன்று, ௰ மாற்றுக்குச் சாதா ஆணி.

இவைகளில் பசுமை பழுப்பு அறியவும், இனி நவமணியின் விலையறியவும்; மரகதம், பவளம், பதுமராகம், நீலம், புருடராகம், கோமேதகம், வச்சிரம், தரளம்,

வயிடூரியம் இந்த ஒன்பதுக்கும் விலையறியும்படி பச்சைக் குரதி, வச்சிரத்துக்கு மஞ்சாடி, பவளத்துக்குக் கழஞ்சி, முத்துக்குச் சவ்வு, மற்ற இரத்தினங்களுக்குப் பலகையால் அறியவும்.

பலகையாவன கோடி உக கொண்டது பலகையென்றறியவும்.

அங்கொத்துப் புள்ள டிமூன் றரைதனக் கிரண்டு மொன்று
பொங்கறு நாலு கொத்து புள்ளடிக் கீழின் சாய்ப்பு
அங்கரைப் புள்ளின் பாத மதின்மீதிற் கொத்தி யங்கச்
சங்கெழு மூன்று கொத்து சாய்ப்பரை இரண்டு கொத்தே (க)

கொத்தொரு புறமே என்னக் கூறுமேழ் சாய்ப்பி ரண்டு
பொத்தொரு சாய்ப்ப ரைக்குப் புள்ளடி ஐந்து கொத்து
அத்தவொன் பதுவே நாள்மூன் றரைதனக் கிரண்டு மொன்று
பத்துமாற் றாணி யந்நாட் கொன்றரை பகரும் பொன்னே. (உ)

உரை : ரு மாற்றுக்கு ரு கொத்து; ருவ மாற்றுக்கு ங புள்ளடி, ரு௨ மாற்றுக்கு உ புள்ளடி; ருஞ மாற்றுக்கு க புள்ளடி, சா மாற்றுக்கு ச கொத்து, சாவ மாற்றுக்குப் புள்ளடி அதன்கீழ் சாய்ப்பு. சா௨ மாற்றுக்குப் புள்ளடி, சாஞ மாற்றுக்குப் புள்ளடிமேல் கொத்து க, எ மாற்றுக்கு ங கொத்து, எவ-மாற்றுக்குச் சாய்ப்பு, எ௨ மாற்றுக்கு உ கொத்து, எஞ மாற்றுக்கு க கொத்து.

இவை புறம் என்றறிக.

அ மாற்றுக்கு உ சாய்ப்பு, அவ மாற்றுக்கு க சாய்ப்பு, அ௨ மாற்றுக்குப் புள்ளடி, அஞ மாற்றுக்கு ரு கொத்து, கூ மாற்றுக்கு ச கொத்து, கூவ மாற்றுக்கு ங கொத்து, கூ௨ மாற்றுக்கு உ கொத்து, கூஞ மாற்றுக்கு க கொத்து, ௰ மாற்றுக்குச் சாதா ஆணி. இவ்வாறு அ முதல் ௰ வரைக்கும் உள் என்றறிக. இருபத்தொரு கால் உரைக்கப் பொன்னிறந்தெரியும் தேங்காய் தடவி உரைக்கவும்.

## அஅ. மாற்றுக்கணக்கு

### விருத்தம்

பத்து மாற்றுள் செம்பொனோர் பணஎடை
ஒன்பது பணஎடை வெள்ளி
சுத்த மாகவிட் டுருக்கமாற் றொன்றெனச்
சொல்வ தொன்றரை மாற்றுக்கு
அத்தம் பத்துமாற் றுளதுமுப் பணஎடை
இரச தம்அத னோடு
வைத்து ருக்குதல் ஒருபதி னேழென
வகுத்தனர் தொகை மாதோ. (க)

ஈழம் பத்துமாற் றொருபண எடையுடன்
எழிலு டைத்தனி வங்கம்
ஆழி நாற்பண எடையிட மாற்றிரண்
டாகு மால்அது வன்றி
மாழை பத்துமாற் றொருபண எடையதில்
வடிவு டைநிறை வங்கம்
மூழ்க முப்பண எடையிட மாற்றிரண்
டரைய தாமொழி குவரே. (உ)

மாசை பத்துமாற் றறுபண எடையதில்
மாசி லாவொளி வங்கம்
ஏசி லாப்பண எடைபதி னான்கிட
மூன்று மாற்றுமூன் றரைக்குப்
பேசு பீதகம் பத்துமாற் றேழ்பண
எடையொடு பெரு வங்கம்
ஆசி லாப்பண எடைபதின் மூன்றென
அளித்திட நான்குமாற் றாமே. (௩)

கூறும் ஆடகம் பத்துமாற் றிருபண
விடையொடு கூட்டிய வங்கம்
ஏறு முப்பண் எடையிட விசைபெறும்
நால ரைக்கினிச் சொல்வாம்
ஊறு மாற்றொரு பத்துள காஞ்சனம்
பணஎடை ஒன்பதும் வங்கம்
ஈறி லாப்பண எடைபதி னொன்றிட
இசையு மாற்றைந் தாமே. (ச)

ஈகை பத்துமாற் றொரு பணஎடைஇர
சதம்ப ணஎடை யொன்றே
ஆகும் ஐந்தரை மாற்றினுக் காடகம்
பதினொரு பணஎடை அதனில்
வாகை வங்கமொன் பதுபண எடைதரல்
வழங்கு மாற்றா றாமே
தோகை பணட்மபன் னிருபண எடையொடு
தொட்டி மையுள வங்கம். (ரு)

பாங்கி னாம்பண எடையிரு நான்கிடல்
பகுத்த வாறொடு கான்மாற்(று)
ஓங்க வேங்கையோர் பத்துமாற் றையைந்து
பணஎ டையொடு வங்கம்
ஆங்கு மூவைந்து பணஎடை யளித்திட
ஆற ரைமாற் றாமேல்
ஊங்கு மாடைபத் தோடுமுப் பணஎடை
பத்து மாற்றுடன் வங்கம் (சா)

வடிவு சூழுமேழ் பணஎடை யளித்திட
ஆறொடு முக்கான் மாற்றே
இடுதல் மாசையோர் பத்துமாற் றிருபஃ
தேழ்ப ணஎடை யத்துள்
முடமை வங்கம்பத் தோடுமுப் பணவிடை
யிடின்மொ ழியெழு மாற்றுக்(கு)
உடலொர் பத்துமாற் றீரெழு பணஎடை
உடனறு பணஎடை வங்கம். (எ)

இட்டு ருக்கவே ழோடுகான் மாற்றினுக்(கு)
இரணி யம்பத்து மாற் றாகப்
பட்ட தோரிரு பஃதின்மேல் ஒன்பது
பணஎ டையொடு வங்கம்
விட்ட தேபதி னொருபண எடையதாம்
விளம்பு மேழரை மாற்றுக்(கு)
ஒட்டு தேசிக மூவைந்து பணஎடை
இரசதம் பணஎடை ஐந்தே. (அ)

துன்று மேழொடு முக்கான் மாற்றுக்கு
முப்ப தோர் பண எடை சுவணம்
ஒன்று மாற்றொரு பத்து ளததனோ
டிரசதம் பணஎடை யொன்பான்
நின்ற நாலிரு மாற்றினுக் கிரணியம்
சோடசப் பணஎடை யிதனோ
டொன்ற வங்கநாற் பணஎடை போடுதல்
மாற்றெட் டேகா லாமேல். (கூ)

ஆட கம்பத்து மாற்றுமுப் பத்துமூன்
றிரசதம் பணவிடை யத்துள்
கூடும் வங்கமோ ரேழ்பண எடையெனக்
கூறும் எட்டரை மாற்றுக்(கு)
ஈடில் பத்துமாற் றொருபதி னேழ்பண
எடவெ றுக்கையும் வங்கம்
வாடின் முப்பண எடையிட வெட்டொடு
முக்கான்மாற் றாமெனப் புகல்வார். (க0)

ஈறில் காஞ்சனம் ஏழைந்து பணஎடை
இரசதம் பணஎடை யைந்து
மாறு றாதிட மாற்றொன்பா னாகுமேல்
மாற்றொரு பத்துள மாசை

கூறு மூவறு பணஎடை யோடிர
சதம்இரு பணஎடை கூட்டல்
ஊறு மாற்றொன்ப தோடுகா லாகுமேல்
உடன்முப்பத் தேழ்பண எடையில். (கக)

மாற்றுக் கணக்கு முற்றிற்று.

## அகூ. பேரெண் (க)

### *வெண்பா*

கோடி யுடன்சங்கம் விந்தங் குலம்பதுமம்
நீடு சமுத்திரமே நேரிழையாய் - ஓடிவரும்
வெள்ளம் பிரளயம் யோசனைகற் பம்விகற்பம்
கள்ளவிழும் பூங்குழலாய் காண்.

உரை : (யொதூய)

| | | |
|---|---|---|
| கோடி | (பத்து நூறாயிரத்துப் பத்துக்கொண்டது) | மகா கோடி |
| மகாகோடி | ,, | சங்கம் |
| சங்கம் | ,, | மகாசங்கம் |
| மகாசங்கம் | ,, | விந்தம் |
| விந்தம் | ,, | மகாவிந்தம் |
| மகாவிந்தம் | ,, | சமுத்திரம் |
| சமுத்திரம் | ,, | மகாசமுத்திரம் |
| மகாசமுத்திரம் | ,, | வெள்ளம் |
| வெள்ளம் | ,, | மகாவெள்ளம் |
| மகாவெள்ளம் | ,, | பிரளயம் |
| பிரளயம் | ,, | மகாபிரளயம் |
| மகாபிரளயம் | ,, | யோசனை |
| யோசனை | ,, | மகாயோசனை |
| மகாயோசனை | ,, | கற்பம் |
| கற்பம் | ,, | மகாகற்பம் |
| மகாகற்பம் | ,, | விகற்பம் |
| விகற்பம் | ,, | மகாவிகற்பம் |

## கூ0. பேரெண் (உ)

### *வெண்பா*

மாகமுந் தன்மனையும் அற்புதமும் உற்பலமும்
ஏகம் அனந்தமுடன் வேணுவாம் - தோகாய்

சலஞ்சலமு மந்தரையுந் தாரகையும் மேரு
வலம்புரிமின் பின்புலையோர் மட்டு.

உரை : (யொசூய)

| | | |
|---|---|---|
| மகாவிகற்பம் | (பத்து நூறாயிரத்துப் பத்துக்கொண்டது) | மாகம் |
| மாகம் | ,, | மகாமாகம் |
| மகாமாகம் | ,, | தன்மனை |
| தன்மனை | ,, | மகாதன்மனை |
| மகாதன்மனை | ,, | அற்புதம் |
| அற்புதம் | ,, | மகாஅற்புதம் |
| மகாஅற்புதம் | ,, | உற்பலம் |
| உற்பலம் | ,, | மகாஉற்பலம் |
| மகாஉற்பலம் | ,, | வேணு |
| வேணு | ,, | மகாவேணு |
| மகாவேணு | ,, | சலஞ்சலம் |
| சலஞ்சலம் | ,, | மகாசலஞ்சலம் |
| மகாசலஞ்சலம் | ,, | மந்தாரை |
| மந்தாரை | ,, | மகாமந்தாரை |
| மகாமந்தாரை | ,, | மேரு |
| மேரு | ,, | மகாமேரு |
| மகாமேரு | ,, | வலம்புரி |
| வலம்புரி | ,, | மகாவலம்புரி |

என்று சொல்லப்பெறும்.

## வாழ்த்து

பொருவிலாப் புகழ்சேர் காரிநா யன்தான்
புகன்றிடு கணிதநூன் முழுதும்
அரிதினிற் படித்தோர் எழுதினோர் அச்சில்
அமைத்தவர் அநுதினம் வாழி
இருபிறப் பாளர் ஆதிநாற் குலத்தோர்
இயலிசை வல்லவர் வாழி
கருதுநான் மறையும் வாழிமுத் தொழில்செய்
கடவுளர் மூவரும் வாழி.

கணக்கதிகாரம்
முற்றும்.

## செய்யுள் முதற்குறிப் பகரவரிசை

நெல்லோ டரிசி
நெல்லிசலம் வேண்டில்
படிக்கும் எண்வாய்
பத்து மதிலுடையான்
பத்து மாற்றுள
பரவுகின்ற கோணத்தைப்
பலவின் சுளையறிய
பண்ணு வடசொல்
பாங்கி னாம்பண
பாராண்ட மன்னவன்
புக்கி னக்குயர்
புல்லசுரர் களைகளைந்து
புனமூன்றில் மேய்ந்து - நெறி
புனமூன்றில் மேய்ந்து - வழி
பொன்றும் இரண்டாம்
பொன்னி நாட்டுப்
மட்டாறு விட்டம்
மண்ணளவை மாற்றியது
மண்ணும் மணலும்
மரக தந்தனக்
மரக தம்பவ
மலர்பத்துப் போதெட்டு
மல்லிகை ஐந்து
மற்றும் வங்கமுட்
மாகாணி பத்துமா
மாறை பத்துமாற்
மாற்றிற்கழஞ்சு பொன்னில்
மிக்க திருக்குப்
மின்னு நாலரை
ழந்திரிய ரைக்காணி
முப்பத்தி ரண்டு
முறித்தறிய வேண்டில்
முற்சதுர மான
முன்னே உரைத்த
வடிவு சூழுமேழ்
வட்டத்தரைகொண்டு - தரை
வட்டத் தரைகொண்டு - தா
விட்டத்தரை கொண்டு
விட்ட மதனை
வில்லாகில் அம்பாகில்
வைக்கோல் திரைகல்
வையணுதூள் பஞ்சு